ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 276.







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக மாதந்தோறும் வெளிவருவது
ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 23 | 1971ஞ ஸெப்டம்பர்மீ வெளியீடு<br>விரோதிகிருத்ஞ ஆவணிமீ | ஸஞ்சிகை 12 |
|---|---|---|

# ஸ்ரீ ராமாநுஜன் நேயர்களுக்கு அறிவிப்பு.

## ஸம்வத்ஸராந்த விஜ்ஞாபனம்

டிஸம்பர் (மார்கழி) மாதத்தில் செய்யவேண்டியதான ஸம்வத்ஸராந்த விஜ்ஞாபனம் இப்போதே செய்ய ப்ராப்தமாகிறது. 276 லக்கங்கொண்ட இவ் விதழ் முறைப்படி டிஸம்பர் (மார்கழி) மாதத்தில் வெளிவரவேண்டியது இப்போதே வெளிவருகின்றது. கீழ்மாதங்களில் காலநியதியின்றிக்கே அடுத்தடுத்துச் சில இதழ்களை வெளியிட நேர்ந்தமைதான் இதற்குக் காரணம். இதுவரை தை மாதப் பிறப்பு ஸ்ரீ ராமாநுஜனுக்கு ஸம்வத்ஸராரம்பமாக இருத்துவந்தது. இனி அந்த ஸ்தானத்தில் தீபாவளியைக் கொள்ளவேண்டியது.

ஸ்ரீ ராமாநுஜன் இடையூறின்றி வெளிவருவதற்கு பகவத் பாகவத அநுக்ரஹமே முக்கிய காரணமானது; அவ்வநுக்ரஹம் நிரந்தரமாயிருக்குமென்பதில் திடநம்பிக்கையுடையோம். பகவதநுக்ரஹத்திற் காட்டிலும் பாகவதாநுக்ரஹம் இன்றியமையாதது. ஏறக்குறைய முந்நூறு நேயர்கள் சந்தா செலுத்தவேண்டியவர்களாகத் தேறுகிறுர்கள். கார்யாலயத்திலிருந்து கடிதம் வருமென்று எதிர் பார்த்திருக்கிறுர்கள்போலும். இந்த ப்ரதீக்ஷை வேண்டா. பத்ரிகை நடத்துவதிலுள்ள சிரமங்களை அறியாதாரில்லை. அவரவர்களே விரைவில் சந்தா பாக்கியை அனுப்பிவிடவேணும். 25/- ரூ செலுத்துமவர்களை ஜீவியச் சந்தாதாரர்களாகக்

கொள்வோமென்று 1969 முடிவில் ஓரிதழில் வெளியிட்டிருந்தோம். அப்போது 126 பெரியார்கள் அவ்வண்ணம் அனுப்பியிருந்தார்கள். மணவாளமாமுனிகளின் அறுநூற்றாண்டு நிறைவு நினைவுமலராக நாம் செய்துள்ள வெளியீடுகளையும் அவர்கள் அறிந்துள்ளார்கள். ஆகவே அவர்களையும் வழக்கம்போல் வருடச் சந்தா செலுத்திவரவேணுமென்று வேண்டுகிறோம். ஆனால் அவர்களை நிர்ப்பந்திக்க நியாயமில்லை. தாமாகவே அருள்கூர்ந்து அனுப்புவர்களென்றிருக்கிறோம். மற்றுள்ளவர்கள் விஜயதசமிக்குள்ளாக அனுப்பவேணும். அனுப்பாதவர்களுக்குப் பத்ரிகை கிடைப்பது ஸந்தேஹமேயாகும். ... ... .... *

---

## காசிக்கும் பிரயாகைக்கும் சென்றிருந்த செய்திகள். —P. B. A.

23-8-71 முதல் 2-9-71 வரை நாம் வடநாட்டுச் சிறுயாத்திரை செய்து வந்தோமென்பதைப் பல ஆப்தர்கள் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். அவ்விடத்து விசேஷங்களை அவரவர்களுக்குத் தனித்தனியாக எழுதாமல் இக்கட்டுரை மூலமாகப் பலருமறியத் தெரிவிக்கலாகிறது. அலஹாபாத் மகாநகரத்திலிருந்து அங்குள்ள பல வித்வான்கள் கூடி, சென்ற வருஷத்தில் நமக்குக் கடிதமொன்று எழுதியிருந்தார்கள். (விஷயமென்னவென்றால்)—

> "ப்ரயாக க்ஷேத்திரமான இவ்விடத்தில் பலவாண்டுகட்கு முன்பு நிறுவப்பட்டுள்ள பாரதீபரிஷத் என்னும் ஸமிதிமூலமாக ராஷ்ட்ரபதியைக் கொண்டு உங்களுக்கு மஹாமஹிமோபாத்யாய டைடல் பெறுவிக்க உத்தேசித்திருக்கிறோம். இதற்குத் தாங்கள் நேரில் விஜயம் செய்ய வேணும். தங்களுடைய இசைவைத் தெரிந்துகொண்டு பிறகு தேதி நிச்சயம் பண்ணித் தெரிவிக்கிறோம். எங்களுடைய மனோரதத்தை பங்கம் செய்யாமல் தாங்கள் தவறாது விஜயம் செய்வீர்களென்று நம்பி யிருக்கிறோம். ஸம்மதிபத்ரிகையை ஆவலுடன் எதிர்பார்த்திருக்கிறோம்."

என்றெழுதி யிருந்தார்கள். அதற்கு நாம் ஒருபதிலும் எழுதாமலிருந்துவிட்டோம். இரண்டொருமாதம் பொறுத்து மறுபடியும் நிர்ப்பந்தமாகக் கடிதமெழுதினார்கள். அதற்கு பதில் எழுதினோம்—

> "நான்குவருஷங்களுக்கு முன்பு டில்லி ஸர்க்கார் தாங்களளித்த பரிசை நேரில் வந்து பெற்றுப் போக வேணுமென்று வெகு நிர்ப்பந்தமாகத் தெரிவித்துங்கூட என்னுடைய அசக்தியினால் போக முடியாமலே போயிற்று; அவர்கள் அதை சென்னை மாநகரிலேயே பெறுவித்தார்கள். இப்போது அசக்தி அதிகமாகுவே யிருப்பதனால் என்னை நிர்ப்பந்திக்க வேண்டாமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்."

என்றெழுதிவிட்டேன். அதே ஸந்தர்ப்பத்தில் நமக்கு சதாபிஷேகம் [எண்பதாவது ஆண்டுநிறைவு] ஸமீபித்திருந்ததனால் பங்குனி மாதவிசாகத்திற்கு முன்னாக அதை டில்லி மாநகரில் நிகழ்த்தவேணுமென்று கொண்ட அவ்விடத்துப் பெரியார்

கள் பலர் நிர்ப்பந்தமாக அழைத்திருந்தார்கள். அப்போது நாம் த்வாரகா க்ஷேத்ரயாத்ரையை உத்தேச்யமாகக்கொண்டு பல ஆப்தர்களோடுங்கூட புறப் பட்டுப் போயிருந்தோம். 21-3-71. Sunday அன்று புதுடில்லியில் நடந்த விசேஷத்திற்கு அலஹாபாத் நகரத்திலிருந்துங் கூடச் சில பிரமுகர்கள் வந் திருந்தபடியால் "இவ்விடம் வருவதற்கு மட்டுப் சக்தி; பிரயாகை வருவதற்கு அசக்தியோ?" என்று கேட்க, பிறகு எப்போதாவது ஸௌகரியமான ஸமயத்தில் அவசியம் வருகிறேன் என்று அவர்களுக்கு ஆறுதலாகச் சொல்லியிருந்தேன்.

அவர்கள் அடுத்தடுத்து எழுதிக்கொண்டிருந்தார்கள். கடைசியாக இது அரிவார்யமென்று அறுதியிட்டு ஆகஸ்டுமாதமுடிவில் வருவதாகத் தெரிவித்திருந் தோம். அவர்கள் 29-8-71 ஞாயிற்றுக்கிழமையன்று பரிஷத்து நடத்துவதாக நிச்சயித்துப் பத்ரிகைகள் பிரசுரஞ் செய்துவிட்டார்கள். நாலைந்து நாள் முன் னுடியே புறப்பட்டு முன்னம் காசிக்கு வரவேணுமென்று தெரிவித்திருந்தார்கள். அதற்கிசைந்து 23-8-71ல் புறப்பட்டு வழியில் விசரமித்துக்கொண்டு 27-8-71 வெள்ளிக்கிழமை காலை காசி சேர்ந்தோம். அங்கு நாக்பூர் போஸலாமந்திர மென்கிற இடம் கங்கைக் கரையில் நமக்கு ஸ்வக்ருஹம் போன்றதென்று நாம் பலகால் தெரிவித்திருப்பது நண்பர்களுக்கு நினைவிருக்கும். தேவேந்திரபவனம் என்று நம்மால் பெயரிடப்பெற்ற அவ்விடத்திற்குச் சென்று சேர்ந்தோம். அவ் விடத்து விசேஷங்கள் சுருக்கமாக எழுதப்படுகின்றன.

காஞ்சியிலிருந்து நாம் புறப்பட்ட மறுநாள் விநாயக சதுர்த்தி. காசியில் கணபதி மஹோத்ஸவமென்று பலவிடங்களில் பத்துநாள் விசேஷமாகக் கொண் டாடுவதென்பது வித்வான்கள் கூடி சாஸ்த்ரார்த்த விசாரங்கள் செய்வதுதான். காசியோ வித்வான்கள் மலிந்த விடம். எனக்குத் தெரிந்து நாற்பத்தொன்பது இடங்களில் இந்த கணபதி மஹோத்ஸவஸதஸ்ஸு நடப்பதாக என்னிடம் வந்த ஆஹ்வான பத்ரிகைகளினுல் அறிந்தேன். மூன்று இடங்களுக்குமட்டுமே என்னுல் போகமுடிந்தது. அவ்விடங்களில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் நானடைந்த ப்ரஹ்மானந்தத்தையும் சுருங்க விஜ்ஞாபிக்கிறேன்.

நான் தங்கியிருந்த இடத்திற்கு அருகேயுள்ள ஸாங்கவேத வித்யாலயம் என்னுமிடத்திற்கு முதலில் சென்றேன். இது மிகப் பெரிய கட்டிடம். இவ்விடத் தில் ப்ரஹ்மஸ்ரீ பண்டிதராஜ. ராஜேச்வர சாஸ்த்ரி என்பவர் நெடுநாளாக நியாய சாஸ்த்ர உபாத்யாயராக இருந்துவருகிருர். இவர் த்ராவிடர்; (தமிழே பேசுகிற வர்.) ஸுப்ரஸித்தராய் விளங்கின திருவிசநல்லூர் ராமஸுப்பா சாஸ்திரிகளின் பௌத்ரருடைய புத்திரரென்று சொன்னுர்கள். காசியிலுள்ள ஸகல வித்வான் களும் இவரிடத்தில் மிக்க மதிப்பு கொண்டிருக்கிருர்கள். திர்யக்புண்ட்ர பஸ்மதார ணுதிகளை இவர் அறவே விலக்கியிருந்தாலும் அங்குள்ள அத்வைதிகளும் சைவர் களுமான எல்லாரும் இவரிடத்தில் நல்ல மதிப்பு வைத்திருக்கிருர்கள். இந்த ஸாங்கவேத வித்யாலயத்திற்கு இவரே ப்ரதான அத்யாபகர். நியாய சாஸ்திரத் தில் இவர் அத்விதீய வாவதூகராகக் குலாவப்படுகிருர். இவர் சில வருஷங்க ளுக்கு முன்பு இருமுறை சென்னைக்கு வந்திருந்தபோது இவரோடு மிகநெருங்கிய

பரிசயம் எனக்கு ஏற்பட்டிருந்ததால் இவ்விடத்திற்கு நான் சென்றவுடனே அங்குள்ளாரெல்லார்க்கும் என்னை அறிமுகப்படுத்தினர்.

---

இதை நான் எழுதிக்கொண்டிருந்தபோது, சென்னையில் வாழ்பவரும் என்னுடைய பரம ஆப்தரும் சிறந்த அட்வகேட்டும் வடமொழிவல்லுநருமான ஸ்ரீமதுபயவே. R. V. சேஷாத்ரியாசாரியர் எழுதிய கடிதமொன்று கிடைத்தது. இவர் அடிக்கடி நமக்கு எழுதுகிற கடிதமெல்லாம் ஸம்ஸ்க்ருத பாஷையிலேயே யெழுதுவது வழக்கம். என்ன காரணமோ இப்போது தமிழில் எழுதியிருக்கிறார். அதை அப்படியே இங்குப் பிரசுரித்துவிட்டு மேற்செய்திகளை யெழுதுகிறேன். "9—9—71 .... .... ஸ்வாமி பிரயாகைக்குப் புறப்படும்போது அடியேனுக்கு விடுத்த ஸ்ரீமுகத்தில் ஸாஹஸக்ருத்யம் செய்யப்போவநாக எழுதியிருந்தது. உண்மையில் இப்போது தேவரீர் தூரதேசப் பயணம்செய்வது அத்யந்த ஸாஹஸமே. நிற்க. ப்ரயாணம் ஸௌகரியமாசு முடிந்து ஸ்வஸ்தானம் சேர்ந்தாயிருக்குமே. அங்கு நடந்த ஸகல வ்ருத்தாந்தங்களையும் ஸ்வாமியின் மூலமாகவே அறிய விரும்பி இந்த விண்ணப்பமெழுதுகிறேன். ஸ்ரீ ராமாநுஜனில், ஸங்கோசத்தினால் சுருக்கமாக எழுதிவிடக்கூடும். அது வருகிறபோது வரட்டும். அங்குள்ள வித்வான்கள், அதிலும் பிரதிபக்ஷிகளாகக் கருதப்படுகிற சைவர்களும் அத்வைதிகளும் ஸ்வாமியை ஆதரித்தவிதம், ஸ்வாமி அவர்களை உபந்யாஸங்களினால் ஆனந்த ஸாகரத்தில் மூழ்கச்செய்த விதம், அங்கு ஸ்வாமிக்கு டைடல் அளித்த ப்ரகாரம்–இவை யெல்லாவற்றையும் விரிவாக அடியேனுக்கு எழுதியருளவேணும். அடியேனும் ஸ்வாமியோடு கூடவே வந்து எல்லாம் நேரில் கண்டு களிக்க பாக்கியமில்லாமற்போனாலும் ஸ்ரீ முகத்தைக் கொண்டாவது க்ருதார்த்தனாகக் கடவேன். ......... தாஸ: சேஷாத்ரி சர்மா."–இந்த ரீதியில் இன்னும் சில பெரியார்களின் ஸ்ரீமுகங்களும் கிடைததிருப்பதுண்டு. ஏல்லார்க்கும் "ஸ்ரீராமாநுஜன் விரைவில் வெளிவரும்" என்றே யெழுதிவிட்டேன். காசீப்ரயாக வ்ருத்தாந்தங்களைச் சிறிது சுருக்கமாகவே யெழுத எண்ணியிருந்த எண்ணம் மாறிவிட்டது. தெரிவிக்கவேண்டியவற்றை யெல்லாம் ஆனந்தமாகத் தெரிவிக்கிறேன்.

---

காசியில் கணபதி மஹோத்ஸவக் கொண்டாட்டம் மேலே ப்ரஸ்தாவித்த ஸாங்கவேத வித்யாலயத்தில் நடந்தவிதம் மிகவும் வியக்கத்தக்கதாயிருந்தது. நான் அங்குச் சென்ற ஸமயம் வித்யார்த்திகளுக்குப் பரீக்ஷை நடந்துகொண்டிருந்தது. பத்து பன்னிரண்டு வயதுக்குட்பட்ட முப்பது வித்யார்த்திகளைக் கண்டேன். ஒவ்வொரு பிள்ளையும் மௌஞ்ஜி அஜிந தண்டதாரணங்களோடு காட்சியளித்த அதிசயம் எங்கும் காணமுடியாத அதிசயமே யாகும். காசிராஜாவின் குமாரனும்; வயது பத்துக்குமேலில்லை. நியாய சாஸ்திரத்தில் பஞ்சலக்ஷணி வாசித்துக்கொண்டிருக்கிறான். மஹாதேஜஸ்வியாய் ஒரு லக்ஷணத்தை உபபாதித்துக்கொண்டிருக்கிறான். தட்டுத்தடங்கலில்லாமல் *அவச்சேதகாவச்சிந்நமயமாக வ்யவஹரித்துக் கொண்டிருக்குமழகைக்கண்டு வியந்தேன். மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீ ராஜேச்வர சாஸ்திரிகளைக் காசிராஜாவானவர் தனியாக ஆதரித்து இங்ஙனே சிக்ஷைசெய்ய ஏற்பாடு பண்ணியிருப்பதாக அறிந்தேன். மற்றும் பல

பிள்ளைகளுக்குப் பரீக்ஷை நடக்க வேண்டியிருந்தும் என்னுடைய உபந்யாஸத்திற்கு அவகாசமளிக்கவேணுமென்றே பரீக்ஷையைப் பிற்பகலுக்கு ஒத்திப்போட்டு, பிற்பகலில் போட்டிருந்த வ்யாக்க்யாநச்ரேணி: என்பதை இந்தவேளையில் வைத்துக்கொள்வதாகச் சொல்லி ஆரம்பம் செய்தார்கள், உபந்யாஸத்தை வியாக்கியானமென்பது அந்த தேசத்துவழக்கம். ஸம்ஸ்க்ருதத்திலேயே உபந்யாஸம். முதலில் ஒரு வித்வான் ''ஸிந்தௌ பிந்து:''. என்று மகுடம் கொடுத்து உபந்யஸிக்கத் தொடங்கினர். கடலில் ஒரு துளி, என்பது உபந்யாஸ விஷயம். கடல்போன்ற சாஸ்த்ரங்களில் கடுகு போன்ற ஒரு ஸ்வல்பவிஷயத்தைச் சொல்லுகிறேன என்று ஆரம்பித்து ''அநந்தபாரம் பஹு வேதிதவ்யம் அல்பச்ச காலோ பஹவச்ச விக்நா:, யத் ஸாரபூதம் தத் உபாததீத ஹம்ஸோ யதா க்ஷீரமிவ அம்புமிச்ரம்'' என்கிற சுலோகத்தின் பொருளை அழகாகவும் செவிக்கின்பமாகவும் உபந்யஸித்தார் அவர்.

அடுத்தபடியாக என்னைப்பேசும்படியாகக் கேட்டுக்கொண்டார்கள். ''ஸிந்தௌ பிந்து:'' என்றதைக் கேட்டீர்கள்; பிந்தௌ ஸிந்து: என்பதைக் கேளுங்கள் என்று சொல்லி ஆரம்பித்தேன். (அதாவது) கடலில் திவலையைக் கேட்டீர்கள்; திவலையில் கடலைக் கேளுங்கள் என்றபடி. பிள்ளைப் பெருமாளையங்கார் கலம்பகத்தில் ''காணுத புதுமை பல காட்டுவன்'' என்கிற செய்யுளில் ''பெரிய 'கனகவரையைச் சிறிய கடுகினிலடைத்துவைப்பன்'' என்ருர். ஒரு சிறு கடுகுக்குள்ளே பெரிய மேரு பர்வதத்தை அடக்கி வைப்பேன் என்றபடி. சம்பிரதமென்கிற இந்திரஜாலமாகப் பேசப்பட்டதங்கு. நம் ஆசாரியர்கள் உண்மையாகவே கடுகிலே மலையை அடைத்துவைப்பது போலவும் திவலையொன்றிலே கடலையடைத்துவைப்பது போலவும் ப்ரணவத்துக்குள்ளே மலைபோலும் கடல்போலுமுள்ள அர்த்த விசேஷங்களை அடைத்து வைத்திருக்கையாலே அவற்றுள் ஒன்றைச் சொல்ல விரும்பி ''பிந்தௌ ஸிந்து:'' என மகுடமிட்டேன். அகார உகார மகாரங்களின் கூட்டரவாகவன்ரே ப்ரணவமிருப்பது. அதில் அகாரத்தை மட்டும் எடுத்துக் கொண்டேன்; அதற்கு ப்ரக்ருதி சக்தியென்றும் தாதுசக்தியென்றும் இரண்டுண்டே; ப்ரக்ருதி சக்தியினல் பரம புருஷனுடைய ஸகல ஜகத்காரணத்வமும், தாது சக்தியினுல் அவனுடைய ஸகல ஜகத்ரக்ஷகத்வமும் சொல்லப்படுவதாக ஆசாரியர்களின் நிரூபணமாகையாலே ''ஜந்மாத்யஸ்ய யத:'' ''ப்ரக்ருதிச் ச ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத்'' என்கிற ப்ரஹ்ம ஸூத்ரங்களிரண்டையுங்கொண்டு காரணத்வ விவரணமும். 'லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்ய ரூபயா, ரக்ஷகஸ் ஸர்வஸித்தாந்தே வேதாந்தேபி ச கீயதே.'' ''ந ஹி பாலநஸாமர்த்த்யம் ருதே ஸர்வேச்வரம் ஹரிம்'' என்னுமிரண்டு சுலோகங்களைக் கொண்டு ரக்ஷகத்வவிவரணமும் இரண்டு மணி காலம் செய்தேன். 'ஸர்வமிதமஸ்மாகம் ஆபூர்வச்ரவணம்'' என்று சொல்லி அபிநந்தித்தார்கள். அவ்வளவோடு ஸபா விஸர்ஜனமாய்விட்டது.

பிறகு மாலை ஆறு மணிக்குமேல் இரண்டு ஸபைகளுக்குப் போகநேர்ந்தது. அந்த இடங்கள் என்னுடைய ஜாகையிலிருந்து 3, 4 மைல் தூரத்திலிருந்தன;

அவ்விடங்களிலும் கணபதி மஹோத்ஸவக் கொண்டாட்டமேதான் அங்கும் பல வித்வான்கள் கூடியிருந்தார்கள். காலை நடந்த ஸபையில் வந்திருந்த வித்வான்களும் பலர் அவ்விரண்டிடங்களுக்கும் வந்திருந்தார்கள். 6-30 லிருந்து 8 மணி வரை ஒரு ஸபையிலும் 8-30 முதல் 10 மணி வரையில் மற்றொரு ஸபையிலும் என்னொருவனுடைய உபந்யாஸத்தையே நடத்திவைத்தார்கள். காலை உபந்யஸித்த விஷயம் போலவே யிருக்கவேணுமென்று பலரும் கோரினார்கள். "பிந்தௌ ஸிந்து:" என்பது காலையுபந்யாஸத்தின் தலைப்பு. மாலை ஓரிடத்தில் "சீகரே ஸாகர:" என்றும், மற்றோரிடத்தில் "ஆகாசே ஸாகர:" என்றும் மகுடமிட்டுப் பேசினேன். திவலையில் கடல் என்பது முந்தின மகுடத்தின் பொருள். "ஆகாசத்தில் கடல்" என்பது பிந்தின மகுடத்தின்பொருள்; முதல் விஷயம் மகாரார்த்தம். "ஜ்ஞாத ஏவ" என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தை விவரித்தும், கீதையில் (ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ) ஜ்ஞாநீ" என்ற விடத்து சங்கரபாஷ்ய ராமாநுஜபாஷ்யங்களின் வைலக்ஷண்யத்தை நிரூபித்தும் உபந்யஸித்தேன். "அடுத்த ஸபையில் ஆகாசே ஸாகர: என்ற மகுடத்தின் கீழ் உபந்யஸிக்கப்போகிறேனென்று சொல்லி யெழுந்தேன். ஆகாசத்தில் கடல் எப்படியிருக்குமோவென்று வியப்புடன் பலரும் அவ்விடம் வந்து சேர்ந்துவிட்டார்கள். ஆகாசமாக நான் கொண்டது எதை யென்றால், ப்ரணவத்திலுள்ள அகாரத்தின் மேல் சதுர்த்தீவிபக்தி ஏறி லோபித்துவிட்டதாகவன்றோ ஆசார்யர்களின் நிர்வாஹம். ஆகவே கண்ணுக்குத்தெரியாதவதனை ஆகாசமாகவைத்து அதன் பொருளைக் கடலாகவைத்து "யஸ்யாஸ்மி ந தமந்தரேமி" "யோஹமஸ்மி ஸ ஸந் யஜே" என்கிற வேதவாக்யங்களைக்கொண்டு சேஷத்வத்தைக் கடல் வெள்ளமாகவே விவரித்தேன். முடிவில் "யஜ்ஞேந யஜ்ஞமயா ஜந்த தேவா:" என்கிற மூன்றாவது காண்டத்தின் முடிவானுருக்கை விவரித்துத் தலைக்கட்டினேன். அன்று மூவிடங்களிலும் மொத்தம் ஐந்து மணி காலத்திற்குமேல் பேசும்படியான சக்தி எனக்கு எப்படியுண்டாயிற்றென்பது எனக்கே தெரியவில்லை. "ய ஆத்மதா பலதா:" என்ற வேதவாக்யத்தையும், "வலந்தரும் மற்றுந் தந்திடும்-நாராயணவென்னும் நாமம்" என்ற திருமங்கை மன்னன் பாசுரத்தையும் ஸார்த்தகமாகக் கண்டேன்.

[இடையில் ஒரு சிறு குறிப்பு:—இதெல்லாம் நடந்தது காசியில். ஆனால் Free India என்கிற ஆங்கில பத்ரிகையில் இதெல்லாம் (பிரயாகையில்) அலஹாபாத் ஸபையில் நடந்ததாக வெளியிட்டிருப்பது சிறு தவறு. ... காசியில் ஆஜ் என்றொரு ஹிந்தீ பத்ரிகை நாடோறும் வெளிவருகிறது. ஆஜ் என்கிற ஹிந்திச் சொல்லுக்கு இன்று என்று பொருள். 27-8 71ல் மாலை வெளிவந்த அந்த பத்ரிகையில் காலை ஸாங்கவேத வித்யாலயத்தில் நடந்த விஷயம் சுருக்கமாக வெளிவந்துவிட்டது. அது அன்று மாலையே முதல் ஸபையில் பலர்க்கும் விநியோகிக்கப் பட்டது ]

பிரயாகையிலிருந்தும் பத்தெட்டு வித்வான்கள் அன்று வாராணஸிக்கு வந்திருந்தார்கள். வாராணஸீ வித்வான்கள் தெரிவித்ததையும் பிரயாக வித்வான்கள் தெரிவித்ததையும் இங்கு நான் ஆனந்தமாகத் தெரிவிக்க விரும்புகிறேன். ஸ்ரீ அஹோபில மடத்து ஆஸ்தான வித்வானாய் வேதாந்த வாவதூக ரென்று விருது

பெற்ற ஸ்ரீமதுபயவே. வில்லிவலம் நாராயணாசார்ய ஸ்வாமி சில வருஷ காலமாக காசியில் வேதாந்த ப்ரவசனம் செய்து கொண்டெழுந்தருளியிருக்கிறார். அந்த ஸ்வாமி அடியேனைப்பற்றி அடிக்கடி ப்ரசம்ஸித்துச் சொல்லிக் கொண்டிருப்பதாகவும், அதிலிருந்தே தங்களுக்கு என்னை ஸத்கரிக்க விருப்பமுண்டானதாகவும் காசீ வித்வான்கள் ஸபையிலெழுந்து பேசினார்கள். "இதில் எனக்கு விஸ்ரம்பமுண்டாகவில்லையே" என்றேன், அதற்கு அவர்கள் சொன்னது, "ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்? "போத்தாரோ மத்ஸரக்ரஸ்தா:" என்ற ரீதியில் அந்த ஸ்வாமி சேர்ந்தவரல்லர்; ஒரு நாளிருநாளல்ல; அடிக்கடி ப்ரசம்ஸிக்கக் கேட்கிறோம்" என்று சொல்லி அந்த ஸ்வாமியையும் ப்ரசம்ஸித்தார்கள். ப்ரயாகை வித்வான்கள் சொன்னதையும் தெரிவிக்கிறேன். அங்கே கங்கைக் கரையில் த்ரிதண்டி மடத்தில் ஸ்ரீ. உ. வே. ரங்கநாதாசாரியர், M. A., என்பவர் பத்து வருஷங்களுக்கு மேலாக வாழ்ந்து கொண்டிருக்கிறார். இவர் அவ்விடத்து யூனிவர்ஸிடியில் ப்ரொபஸர். (ஸ்ரீ. D. T. தாதாசார்ய ஸ்வாமியின் ஸஹோதரீ புத்ரர்.) இவர் சென்னையில் வாழ்ந்து கொண்டிருந்த காலத்தில் ப்ரீதிவிச்வாஸங் கொண்டிருந்தவர். அவ்வன்பு இற்றைக்கும் மாறாதிருப்பவர். வாராணஸியில் வில்லிவலம் நாராயணாசார்ய ஸ்வாமி போலே இவர் பிரயாகையில் நம்மை ப்ரசம்ஸித்துக் கொண்டிருப்பவராம் தவிர நமதுநாட்டிலிருந்து ஸ்மார்த்த வித்வான்கள் பலர் காசியிலும் ப்ரயாகையிலும் பல ஜோலிகளுக்காகச் சென்று சேர்ந்திருப்பவர்கள். அவர்கள் நம்முடைய மாஸிக பத்ரிகைகளையெல்லாம் நெடு நாளாக வரவழைத்துக் கொண்டிருப்பவர்களாதலால் அவர்களுடைய ப்ரசம்ஸைகளும் சேர்ந்தன. வயது முதிர்ந்த சில வித்வான்கள் அருகே வந்து "நாங்கள் உங்களுடைய மஞ்ஜுபாஷிணீ பத்ரிகை நடந்துவந்த காலம் முதலாகவே உங்களுடைய நாமதேயத்தை நன்கறிந்தவர்கள்; இப்போதும் உங்களுடைய வைதிக மநோஹரா பத்திரிகையை நன்கு அநுபவித்து வருகிறோமே; உங்களுடைய பல திறத்த உருவப்படங்களைப் பார்த்திருக்கிறோம். நேரில் தரிசனம் செய்ய வேணுமென்கிற ஆசையினால்தான் மிகவும் நிர்ப்பந்தித்தும் வரவழைத்தோம் என்று சொல்லி ஸமீப காலத்தில் தங்களுக்கு ஆகர்ஷகமாயிருந்த உருவப்படம் இதுவென்று தங்களிடமிருந்த ஒரு படத்தைக் காட்டினார்கள். அதுதான் இங்கே காணும் உருவப்படம். இந்த வார்த்தைகளை அவர்கள் நமக்கு சென்ற



ஜூலை மாத முடிவில் எழுதியுமிருந்தார்கள். இப்படி யெழுதினவர்கள் வைஷ்ணவர்களல்லர். அத்வைதிகளும் சைவர்களும் மற்றும் இதர மதஸ்தர்களுமானவர்கள். அத்தகைய கடிதத்தைக் கண்டபடியிஞல்தான் 'சிரமங்களை ஸஹித்துக்கொண்டாவது சென்று அவர்களது ஆசையைத் தீர்த்துவருவோம்' என்று ஸாஹஸமாகவே புறப்படலாயிற்று. காசியில் எத்தனை நாளிருந்தாலும் எனக்கும் சலிப்பில்லை. அங்குள்ளார்க்கும் த்ருப்தியில்லை. மறுநாள் மாலை பிரயாகை வந்து சேரவேண்டியதாயிற்று. காசியில் ஸம்ஸ்க்ருத வித்வான்களென்று சொல்லக்கூடியவர்கள் 500 பேர்களாம்; மிகச் சிறந்த வித்வான்கள் என்று பரிகணிதர்கள் 200 பேர்களாம். "காசீ காஞ்சீ" என்று காசியின் பக்கத்திலே பரிகணிதமாயுள்ள காஞ்சியின் நிலைமையை நினைத்து வருந்தினேன்.

— இனி அலஹாபாத் பரிஷத்தின் செய்திகள் —

பிரயாகையில் பாரதீபரிஷத்தென்பது மிகவும் ப்ரக்க்யாதிபெற்றதாம். அதன் நிர்வாஹகர்கள் மிகச்சிறந்த வித்வான்களாம், பெரியபதவிகளில் வாழ்பவர்களாம். இவர்களுக்கு ஒருவருஷத்திற்கு மேலாகத் தோன்றியிருந்த ஆசை என்னவென்ருல், இந்தியாவுக்குள் ப்ரத்யக்ஷஸப்தர்ஷிகள் என்று ஏழு வித்வான்களைத் திரட்டியெடுத்து அவர்களுக்கு மஹாமஹிமோபாத்யாய டைடல் அளித்து ஸத்கரிக்க வேணுமென்று உத்கடமான உத்கண்டையுண்டாயிற்ரும் தாங்கள் தேர்ந்தெடுத்த ஏழுவித்வான்களின் பெயர்களையும் ஆறேழுமாதமாகவே பலபத்ரிகைகளில் வெளியிட்டிருந்தார்கள். அவர்களில் நானொருவனே தென்னிந்தியன். மற்ற ஆறு பேர்கள் மத்யப்ரதேசம், உத்தரப்ரதேசம், ஆந்திரப்ரதேசம், காச்மீர்..... இப்படிப்பட்ட இடங்களிலுள்ளவர்கள். அவர்களெல்லாரும் இதர மதஸ்தர்களே. (சாகுந்தலே) "மத்யே தபோதநாநாம் கிஸலயமிவ பாண்டு பத்ராணாம்" என்று துஷ்யந்தன் கேட்கிறபடி நானொருவனே அங்குக் குழுமியிருந்தவர்களால் உற்று நோக்கத்தக்கவனுயிருந்தேன்.

அங்கு தாராகஞ்ஜென்னுமிடத்தில் ஸ்ரீராம தேசிகவித்யாலய மென்னுமிடத்தில் நாம் தங்கியிருந்தோம். இது ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மிகச் சிறந்த புகலிடம். ஆயிரம் பேர்கள் தங்கியிருக்கக்கூடிய ராமாநுஜகூடமிது. பரிஷத்ப்ரேக்ஷணார்த்தமக அயோத்யை கான்பூர் லக்னவ் காசி முதலான விடங்களிலிருந்து வந்திருந்த வித்வான்கள் பலர் இந்த ராமாநுஜகூடத்தில் வந்திருந்தபடியால் அன்று (29-8-71) பகல் 11 மணியிலிருந்து ஒருமணிவரையில் ஒரு ஸபை கூட்டினார்கள்: விசிஷ்டாத்வைதத்தைப்பற்றிக் கேட்க விரும்பினார்கள். ஒரு மணி காலம் பேசினேன், மற்றவர்கள், நாங்கள் பாடப்ரவசனம் செய்பவர்கள், பேசி வழக்கமில்லையென்று சொல்லிவிட்டார்கள். ஆனாலும் சிறந்த வித்வான்கள். அப்படிப்பட்ட வித்வான்களை நமது நாட்டில் தேடிப்பிடிக்கவேண்டும்.

அன்றுமாலை 5 மணி முதல் 8-30 மணி வரை அலஹாபாத் ஸெண்டரில் ஒரு ரம்யமான ஹர்ம்யத்தில் மஹாஸபை கூடிற்று. தலைமை வஹிக்க டில்லியிலிருந்து ராஷ்ட்ரபதி ஸ்ரீ கிரியவர்கள் வருவதாயிருந்தது. அன்று அவர்கள்

மதராஸ் பக்கம் வரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதாம். அதனுல் உபராஷ்ட்ரபதி ஸ்ரீ பாடக் அவர்கள் விஜயம் செய்திருந்தார்கள். காசி ராஜாவும், மற்றும் நானறியாத சில பிரமுகர்களும் வந்திருந்தார்கள். பரிஷத் ப்ரமுகர்களால் ஸப்தர்ஷிகளாக வரிக்கப்பட்ட எழுவர்களில் நால்வரே அவ்விடம் வந்திருந்தவர்கள். நால்வரில் நானெருவன். ஆறுமாதங்களுக்கு முன்னமே என்னுடைய சரிதைச் சுருக்கம் ஆங்கிலத்தில் எழுதியனுப்பவேணுமென்று கோரியிருந்தார்கள். ஸமய விசேஷங்களில் (Late) Sir S. வரதாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீ D. ராமஸ்வாமி ஐயங்கார், (அட்வகேட்) ஸ்வாமி, க்வாளியர் ஸ்ரீ ஸத்யமூர்த்தி ஐயங்கார் ஸ்வாமி, Dr. V. V. ராமாநுஜம், P. H. D. ஸ்வாமி முதலானவர்கள் ஆங்கிலத்தில் எழுதியிருந்தவை ஒரு தொகுதியாக அச்சிடப்பட்டிருந்தபடியால் அந்த வொரு புத்தகம் பரிஷத்துக்கு அனுப்பப்பட்டிருந்தது. அதிலிருந்து "காஞ்சீ. அண்ணங்கராசார்யாணும் அபிஜ்ஞானம்" என்றொரு ஸம்ஸ்க்ருதவியாஸமெழுதி என்னுடைய ப்ரதிக்ருதியுடன் அச்சிட்டு விநியோகித்தார்கள். அழைப்புக்கிணங்கி வந்திருந்த பற்ற மூன்று வித்வான்களைப் பற்றியும் ஆங்கிலத்தில எழுதி வெளியிட்டிருந்தார்கள். என்னைப்பற்றி யெழுதியதில், 1891ல் காஞ்சியில் பிறந்ததையும் கல்வி பயின்ற வரலாறுகளையும் எழுதிவருகையில் ஸ்ரீ ஜகத்குரு அனந்தாசார்ய ஸ்வாமியையும் ஸ்ரீ. மாம்பள்ளம் ஸுதர்சனசார்ய ஸ்வாமியையும் குறிப்பிட்டு "பிதா பிதாமஹச் ச" என்று எழுதியுள்ளார்கள். இதில் 'மாதா மஹ:' என்னவேண்டிய ஸ்தானத்தில் 'பிதாமஹ:' என்றது அவர்களுடைய மருள். பிதாமஹருடைய வாழ்நாளில் நான் பிறக்கவேயில்லை. பூர்வாச்ரம மாதாமஹரான ஸ்ரீமத் பரமஹம் ஸேத்யாதி (ஷஷ்டி ஸ்வாமி யென்று ப்ரஸித்தராயெழுந்தருளியிருந்த) அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியே எனக்கு பகவத்விஷய ரஹஸ்யாதிகளை உபதேசித்த ஆசாரியரென்பதை அப்போதே ஸபையில் எடுத்துரைத்தேன். அவர்கள் வெளியிட்ட ஷ அபிஜ்ஞான பத்ரிகையில்

> "அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் ஸம்ஸ்க்ருதம் தமிழ் முதலிய பாஷைகளில் ஆயிரத்திற்கு மேற்பட்ட நூல்களை யெழுதி வெளியிட்டுள்ளார்கள்; கிருஷ்ண யஜுர்வேத தைத்திரீய ஸம்ஹிதையைப்பற்றிப் பல விமர்ச நூல்கள் வெளியிட்டு அக்ஷய்யமான புகழையடைந்துள்ளார்கள். மஹா மஹோ பதேசக:, குலபதி:; ஜகதாசார்ய: என்று புகழப்படுபவர்."

என்றெழுதியிருந்ததை ஸபையில் வாசித்து ஹிந்தியில் விளக்கினபோது ஸபாத்யக்ஷ பதவியை அலங்கரித்திருந்த உபராஷ்ட்ரபதி ஸ்ரீ. பாடக் அவர்கள் "நமது பாரத பூமியில் அதிகமான நூல்களை யெழுதியவர் ஆதிசங்கராசார்ய ஸ்வாமிகளென்று கேட்டிருந்தேன்; இந்த ஸ்வாமிகள் ஸஹஸ்ராதிக க்ரந்தங்களை யெழுதியவர் என்பதறிந்து மகிழ்கிறேன்" என்று பேசி எனக்கு மாலையிட்டார்.

## — இனி மஹாமஹோபாத்யாய பட்டமளித்த விவரம் —

ஸபா மண்டபத்தில் கீழ்ப்பகுதிகளில் மூவாயிரம் பேர்களும் மேல்மாடிகளில் இரண்டாயிரம் பேர்களும் குழுமியிருந்தனர். விசிஷ்ட வித்வான்கள் (இருபது

நபர்கள்) மேடையை அலங்கரித்திருந்தார்கள். ஒவ்வொருவரும் ஐந்து நிமிஷம் பேச வேண்டியதென்று அக்ராஸனர் கட்டளையிட்டார். ஐந்தாறு பேர்கள்தான் பேசினார்கள். பிறகு

"மஹாமஹிமோபாத்யாயபட்டம் தற்கால ஸப்தர்ஷிக ளென்று நம்மால் உத்தேசிக்கப்பட்ட 7 வித்வான்களுக்கு அளிப்பதாயிருந்தோம். நான்கு வித்வான்களே உபஸ்தி தர்களாயிருப்பதால் இந்நால்வர்க்கு அளிக்கப்படுகிறது"

என்று சொல்லி, உபராஷ்ட்ரபதியின் கையிலிருந்து பிருத பத்ரிகையை வாங்கி பாம்பே (Bombay) கதாதரஸோமாணியவர்கள் நால்வர்க்கு வழங்கினர். இந்த நால்வரும் ஏதாவது ஸமயோசிதமாகப் பேசவேண்டுமென்று ஸ்ரீ பாடக் அவர்கள் கூற "ஸம்ஸ்க்ருதவிதுஷாம் ப்ரசம்ஸநீயதா" என்பதுபற்றிப்பேசுகிறேனென்று சொல்லிப் பேச எழுந்தேன். உட்கார்ந்தே பேசலாமென்றார்கள்; எழுந்து நின்றே பேசினேன். கரகோஷங்கள் மேம்பட்டிருந்தன.

இந்த பரிஷத்துக்கு விசேஷமான பொருளுதவிபுரிந்த (மேலே ப்ரஸ்தாவித்த) கதாதரஸோமாணியவர்களுக்கு ஸாரஸ்வதாபிமானி யென்கிற விருதைப் பரிஷத்தின் தலைவர்கள் அளித்தார்கள். அவருடைய முடிவுரையோடும். பிறகு உபராஷ்ட்ரபதி யவர்களின் மகிழ்ச்சியுரையோடும் ஸபை ஸமாப்தியடைந்தது

மஹாமஹிமோபாத்யாய விருதளிப்புப் பத்ரிகை மிகச் சிறந்த முறையில் தேவநாகரி லிபியில் அச்சிடப்பட்டுள்ளது.

(அது வருமாறு)

**பாரதீ பரிஷத் - ப்ரயாக:**

என்பது மகுடம். தருமம் ஓங்கி வளருவதற்கும் ஸம்ஸ்க்ருத வித்யாபி விருத்திக்கும் ராஷ்ட்ரத்தின் ஸகலவிதச்ரேயஸ்ஸுக்களின் வளர்ச்சிக்கும் இடைவிடாமல் உழைத்து வருகின்றவரும், ச்ருதிஸ்மிருதீதிஹாஸ புராணாதி ஸகல சாஸ்த்ர துரந்தரரும் நாஸ்திக துர்மத கண்டனத்தில் புகழ்பெற்றவருமான ஸ்ரீமான்

**P. B. அண்ணங்கராசாரியர்**

ப்ரயாக பாரதீ பரிஷத்தினால் மஹாமஹிமோபாத்யாய பிருதுசாத்தி அலங்கரிக்கப்படுகிறார் என்பது பிருதபத்ரிகையிலுள்ள விஷயம்.

— நித்யஸ்ரீர் நித்யமங்களம் —

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸுதர்சந ஸந்தர்சநம்—முதல் பரிச்சேதம்

ஸமீபத்தில் வெளிவந்த ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ரிகை [சோதி 24 ஒளி 9.] காண நேர்ந்தது. ஸ்தூலாக்ஷரங்களை மட்டும் தாராளமாக வாசிக்கக் கூடிய நிலைமையிலிருக்குமடியேன் ஏடுகளைத் தள்ளிக் கொண்டே போனபோது விவாத நிகமனம் என்றிருந்ததைக் கண்டு, சிரமத்தைக் கணிசியாமல் உத்ஸாஹத்தோடு வாசித்துக் கொண்டே போனேன்.

''விவாதத்தை வெறுக்கும் வரதாசார்ய ஸ்வாமியிடம்
தம் கைவரிசையைக் காட்டுவதை விட அதை வரவேற்கும்
காஞ்சீ மஹாவித்வானிடம் காட்டினல் நன்றுயிருக்கும்."

என்று ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணியான பத்ராதிபதி ஸ்வாமியெழுதியிருந்ததைக் கண்டேன். விவாதத்தில் உத்ஸாஹ மற்றவரான ஸ்ரீமதுபயவே வேளுக்குடி ஸ்வாமியோடு போராடுகின்ற ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமி அதை விட்டிட்டு விவாதோத்ஸுகரான அண்ணங்கராசாரியரோடு போராடுவதை வைத்துக் கொண்டால் அது நன்றுயிருக்கும் என்பது மேலே குறித்தவாக்யத்தின் கருத்து. [இந்த விவாத விஷயங்களைப் பலரும் அறிந்திருக்கக்கூடுமாதலால் இது எல்லார்க்கும் புரியுமென்று நம்புகிறோம்.] விவாதத்தை வரவேற்பவனுக அடியேனை ஸ்ரீஸுதர்சன பத்ராதிபர் குறிப்பிட்டிருந்ததற்கு உண்மையில் உள்ளமுவந்தது. அந்த வுகப்பை உடனே அந்த ஸ்வாமிக்கும் தெரிவித்துக் கொண்டேன். ஒருஸமயம் "வலுச்சண்டைக்கு ஓடமாட்டேன், வந்த சண்டையை விடமாட்டேன்'' என்று கொட்டையெழுத்தில் பிரசுரம் செய்துமிருக்கிறேன்.

கீர்த்திமூர்த்தியான சென்னை ஸ்ரீமத். V. V. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி வேதாந்த தீபிகா பத்ரிகைக்குச் சில ஸம்வத்ஸரகாலம் ஸம்பாதகராகவிருந்தபோது அப் பத்ரிகையில் விவாதப்பகுதி என்றொரு பாகத்திற்கு இடமளித்து விவாதக் கட்டுரைகளையெழுதியனுப்பும்படி பல வித்வான்களுக்குத் தெரிவித்துத் தருவித்துப் பிரசுரஞ் செய்து வந்தார். வாதவிவாதக் கட்டுரைகளினுல்தான் உண்மைப் பொருள் விளங்குமென்பது அந்த ஸ்வாமியின் திட நம்பிக்கையாகவிருந்தது. அப்போது சிலவாண்டுகள் அப்படி நடந்து வந்தது. கோபதாபங்களை அறவே அகற்றி நிந்தாபரிஹாஸங்களையுமொழித்து வாதவிவாத நூல்களை வளர்த்திக் கொண்டே போனுலும் வருவதொரு ஹானியில்லை.

சததூஷணியில் (64) யதிலிங்க பேதபங்கவாதத்தில்—"யதாஹு:, *கந்தாம் வஹஸி துர்ப்புத்தே! கர்தபேநாபி துர்ப்பராம், சிகாயஜ்ஞோபவீதாப்யாம் கஸ் தே பார: ப்ரஸஜ்யதே?. ஸந்த்யாவந்தனவேளாயாம் முக்தோஹமிதி மந்யஸே, கண்டலட்டுக

வேளாயாம் தண்டமாதாய தாவஸி* இதி.'' என்று ஸாதித் .திருக்கிறபடியை நோக்குவோமாயின் ஸம்ப்ரதி பந்ந விஷய பூர்த்தியுள்ள விடங்களிலே பரிஹாரோக்திகளும் ரஸ்யங்களாகக் குறையில்லையென்று தேறலாம். ஆக விவாத லேகனங்களை அவரவர்கள் தந்தமக்குள்ள சக்தியளவில் தொடரச் செய்து கொண்டு போவதில் குற்றமேதுமில்லை. எவருடைய கை ஓய்ந்து நிற்கிறதோ அவருடைய வாதம் துர்ப்பல மென்பது எளிதாக விளங்கி நிற்குமே. வாதஸபை கூட்டுவதில் என்ன பலன்? *உச்சைருத்குஷ்ய ஜேதவ்யம்* இத்யாதிகள் ப்ரஸித்தந்தானே.

அனைவரும் கவனிக்கச் சில விஷயங்கள் விநயபுரஸ்ஸரமாக விஜ்ஞாபிக்கிறேனிங்கு. மணவாளமாமுனிகளின் அறுநூற்றாண்டு நிறைவு நினைவுமலர் வெளியீடுகள் பல வித்வான்கள் மூலமாகப் பலவிடங்களில் நிகழ்ந்தன. ஸ்ரீ உ.வே. வாகம்ருத்வர்ஷி வேளுக்குடிஸ்வாமி தமக்குத் தோன்றிய ஒரு விஷயத்தை விந்யஸிந்தார். அதில் ஸ்ரீமதுபயவே, மதுராந்தகம் ஸ்வாமியைப் பற்றியோ அவருடைய வாதத்தைப் பற்றியோ ப்ரஸ்தாவம் புகுந்திருப்பதாக அடியேன் செவியில் விழவில்லை. தத்ப்ரஸ்தாவமே அதில் இராது. அப்படியிருக்க இந்த சர்ச்சையில் இந்த ஸ்வாமி தலையிட்டது எதற்காக? இவ்வளவு ப்ரளயம் விளைவதற்கு என்ன காரணம்? நிகஷ சததூஷணியென்று ஒன்று வெளியிடப் போவதாக மதுராந்தகம் ஸ்வாமி பறை சாற்றிக் கொண்டிருப்பதாகவும் தெரிய வருகிறது இத்தனை யாரவாரம் எதற்காக வென்று தெரியவில்லை.

'எதற்காக வென்று கேள்வி யென்ன? வித்வான்களுடைய க்ருத்யந்தானே யிது!' என்று சிலர் சொல்லக் கூடும்; சொல்லியாகவேண்டும். தடஸ்த வித்வான்கள் இப்போது அடியேனுடைய விஜ்ஞாபனங்களை விசேஷித்துக் கவனிக்க வேண்டும். ஸ்ரீமதுபயவே பண்டிதராஜ D. T. தாதாசார்ய ஸ்வாமியொருவரே மதுராந்தகம் ஸ்வாமிக்கு ஸாதகமாக அபிப்பிராயமளித்தவரென்று ஸ்ரீஸுதர்சன பத்ராதிபஸ்வாமி யெழுதியிருப்பதைக் கண்டேன். இதற்குமேல் அமைதியுடன் கேட்கவேண்டும்.

### — மிக முக்கியமான விஜ்ஞாபனம் —

இறந்த காலத்திலும் நிகழ் காலத்திலும் எந்த வாதவிவாதத்திலும் தலையிடாமல் யாதொன்று மெழுதாமல் காலங்கழித்தவர்களும் காலங்கழிக்கின்றவர்களுமான ப்ரபல வித்வான்கள் பலருளர். கீர்த்தி மூர்த்திகளான ஸ்ரீமதுபயவே. நாவல்பாக்கம் ஸ்வாமி, திருவிண்ணகர் நவநீதம் ஸ்வாமி கோஷ்டீபுரம் ஸ்வாமி போல்வாரை இறந்த காலத்து வித்வான்களில் கொள்ளலாம். இப்போது நாவல் பாக்கத்திலெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமதுபயவே, அய்யா தேவநாதாசார்ய ஸ்வாமி, ஸ்ரீநாராயணாசார்ய ஸ்வாமி போல் வாரை நிகழ்காலத்து வித்வான்களில் கொள்ளலாம். இந்த மஹநீயர்கள் உண்மையில் சிறந்த வித்வான்களும் வாவதூகர்களுமாயிருந்தும் ஸம்ப்ரதாய விவாதங்களில் தலையிட்டவர்களல்லர். இது ஸம்பந்தமாக ஒருநாளும் எழுதுகோலைத் தொட்டறியாதவர்களுமாவர். இவர்களது கோஷ்டியில் இன்னும் சில வித்வான்களையும் கணக்கிடலாம். ஸ்ரீ D. T. ஸ்வாமியும்

மதுராந்தக ஸ்வாமியும் அந்த கோஷ்டியில் பரிகணநீயர்களாக இருந்து விட்டால் (ப்ரக்ருத) வாதப்ரஸ்தாவத்திற்கே அவகாசமிராது. இவ்விருவித்வான்களும் ஸம்ப்ரதாயார்த்த தூஷண பூஷணங்களில் நெடுநாளாகவே தலையிட்டிருப்பவர்கள். இவ்விருவர்க்கும் அடியேனுக்குமுண்டான ப்ரதித்வந்த்விபாவம் ஸ்ரீ வேளுக்குடிஸ்வாமியும் ஸ்ரீஸுதர்சன பத்ராதிப ஸ்வாமியும் அவதரிப்பதற்கு முன்னே பிடித்து ஏற்பட்டதென்பதை உலகமறியும்.

நமது ஸ்ரீராமாநுஜன் தோன்றுவதற்கு நெடுநாளைக்கு முன்னமே இவ்விருவர்க்கும் நமக்கும் விவாதங்கள் தொடங்கின. இதில் அடியேன் மூலமாக வெளிவந்த நூல்கள் தமிழ் தெலுங்கு தேவநாகரலிபிகளில் நாற்பதுக்கு மேற்பட்டவை. [இந்தலக்கக் குறிப்பு இவ்விருவரைப் பற்றி மட்டுமே.]

இடையில் ஓர் இதிஹாஸம்; தற்காலம் ஸ்ரீமதாண்டவன் பெரியாச்ரமத்தில் ஸ்ரீகார்ய துரந்தரராக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுபயவே. வித்வான் சித்ரகூடம் விஜயராகவாசாரியர் ஸ்வாமி அடியேனுக்கு இளமைத் தோழர். அக்ருத்ரிமஸ்நிக்தர். திருநாங்கூர் தையமாவாஸ்யையுத்ஸவத்திற்கு ஒருவிசை அடியேன் விடை கொண்டிருந்தபோது இவரும் அங்கு வந்திருந்தார். ஒரு நாளிரவில் அங்கு ஒரு திருமாளிகையில் சிலநண்பர்களோடு கூட இவர் சயனித்துக்கொண்டு வார்த்தையாடுகிருர். அங்கே ஓர் அறையில் அடியேன் கிடக்கிறேன்: அதை இவர் அறியார். பலபல வார்த்தைகளிடையே ஸாதிக்கிருரிவர்—

> ''அண்ணங்கராசாரியர் இரண்டுலக்ஷம்ரூபா ஸம்பாதித்தார்; ஒருலக்ஷத்தை செங்கல் சுண்ணும்பு மண் மணல்களுக்குச் செலவிட்டார், மற்றொரு லக்ஷத்தை அச்சகத்திற்கும் காகித மூட்டைகளுக்கும் செலவிட்டார்.''

என்று இதுகேட்ட நான் உடனே வெளியிலெழுந்துவந்து ''விஜயம்! என்னோடு கூடவே யிருப்பவர்களுக்குங்கூட இந்த கணக்கு தெரியாதே; ஏற்றத்தாழ்வின்றி உமக்கு எப்படி தெரிந்தது?'' என்று கேட்டேன். அதற்கு அவர் ஸாதித்தது— ''தேவரீர் இங்கிருப்பது தெரியாமலே ஏதோ பேசிபிட்டேன். நல்லவேளையாக நான் தப்பாக ஒன்றுஞ் சொல்லவில்லை; சொன்னது உண்மைதானே நான் சொன்ன கணக்கு குறைவாக இருக்குமேயொழிய அதிகமா யிராது'' என்று.

இந்த ஸ்வாமி இப்போதும் ஸேவை ஸாதித்துக்கொண்டு கோயிலில் எழுந்தருளியிருக்கிருர். த்ரிகரண சுத்தியுள்ளவர். யாரும் கேட்டுப் பார்க்கலாம். ப்ரஸ்துதர்களான இருவித்வான்களோடு போராடின வகையில் மட்டும் பலவாயிரங்கள் செலவழித்திருக்கிறேன். அஸ்மதாசார்யபாத நியமனத்தினுல் மஞ்ஜுபாஷிணி யென்கிற ஸம்ஸ்க்ருத ஸாப்தாஹிக பத்ரிகையை அடியேன் நடத்திக்கொண்டிருந்த காலத்திலேயே ஸ்ரீ D. T. ஸ்வாமியோடு விவாதம் தொடங்கிற்று. அந்தப் பத்ரிகை நின்று இன்றைக்கு 36 வருஷமாகிறது. பத்ரிகை நின்ருலும் விவாதம் நிற்கவில்லை- பர்யவஸான மென்ன? என்று பார்க்கவேணும். இவ்விருவரோடும் நிகழ்த்தின [க்ரந்த ரூபமான] வாதப்போரில் தனிப் புத்தகங்களாக அடியேன் வெளியிட்டவை கிடக்கட்டும். ஸ்ரீ ராமாநுஜன் தோன்றி இன்து இருபத்துமூன்று

ஆண்டுகள் நிறைவு பெற்றன. இப் பத்திரிகையில் வெளிவந்தவை அபரிமிதம். அவற்றில் சில ஸஞ்சிகைகளைமட்டும் இங்குக் குறிப்பிடுகிறேன். 229, 230, 231 இம்மூன்று லக்கங்கொண்ட பத்ரிகைகள் [ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம்] ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வாமிக்கு; 262 லக்கங்கொண்ட ஸஞ்சிகை ஸ்ரீமதுபயவே. பண்டிதராஜ. D. T. ஸ்வாமிக்கு.=இவை ஏகாந்தமாக இல்லை. தென்னாடும் வடநாடுங் கண்டவையே.

ஸ்ரீ மதுராந்தகஸ்வாமி தம்முடைய திருநாம ஸ்பர்சலேசமுமில்லாத வாகம்ருத வர்ஷிஸ்வாமிநூலைப்பற்றி அட்டஹாஸம் செய்யத்தொடங்கினவர், ஆதியோடந்தமாகத் தம்முடைய இருளையும் மருளையுமே அலசியலசிக்காட்டியுள்ள நமது நூலைப்பற்றி என்செய்தார்? நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் 'வாழ்ந்திடுவர் பின்னும் தம் வாய்திறவார்'' என்று ஸாதித்திருக்கிறபடியும், "நம்பரமன்றென்று நாணிமயங்கி நைந்து சோர்ந்து கைமறித்து நின்றனரே" என்று பெரியாழ்வார் ஸாதித்திருக்கிறபடியும் எழுந்தருளியிருப்பது தவிர வேறுண்டோ? (இதன் தொடர்ச்சி மேலே வரும்.)

ஸ்ரீமதுபயவே. பண்டிதராஜ D. T. ஸ்வாமியைப்பற்றியும் விஜ்ஞாபிக்கிறேன். ஸாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து கைகூப்பிநின்று விஜ்ஞாபிக்கிறேன். விவாதத்தில் கலந்துகொள்ளாமலே யிருந்துவிட்டால் கேள்வியில்லை. கனமாகக் கலந்துகொண்டபின்பு மறுப்புரை வெளிவந்தால் பிராமாணிகர்கள் செய்யவேண்டியதென்ன? நின்று விடையிறுக்கவேணும். விடைரிறுக்கும் வழிகள் மூன்றுண்டு.

(1) நான் எழுதாதவற்றை எழுதினதாக ஏறிட்டுக் கண்டனம் செய்திருப்பது தவறு: என்று விளக்குதல்.

(2) வெளிவந்துள்ள மறுப்புரைக்கு இதோ என்னுடைய மறுப்புரை கேண்மின். காண்மின்—என்று தமது கண்டனங்களை விவரித்தல்.

(3) ஏதோ தவறுதலாக எழுதிவிட்டேன்; இப்போது உண்மையை யறிந்து அநுதபிக்கிறேன் என்று ஸஹ்ருதயமாக எழுதி முடிப்பது. ஆக இம் மூன்றுவழிகளே ப்ராமாணிகர்களுக்கு உற்றவை.

திவ்ய ஸ்ரீஸூக்தி நிதியான ஸ்ரீ D. T. ஸ்வாமி அடியேனை நோக்கியெழுதியவற்றில்—

''இது உளறுகிறது; இது பிதற்றுகிறது; இந்த துர்மதி; இந்த குடிலமதி; அந்த குத்ஸிதம்; இந்த உன்மத்தம்;'' இந்த அஸத்து''

என்றிப்படிப்பட்ட—தமக்கே அஸாதாரணமான திவ்யஸூக்திகளைப் பொழிந்திருப்பதை ஏடுதோறுங் காணலாம். அவற்றையெல்லாம் நாம் திவ்ய புஷ்பார்ச்சனையாகக் கொண்டிருக்கிறோமேயொழிய அவற்றால் சிறிதும் மனோவிகாரங்கொண்டிலோம். ஸ்ரீ வசனபூஷணத்தில் (ஏவம்விதோத்தமாதிகாரிகள் பக்கலில்) ''பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்'' என்றுள்ளது;

அடியேனுக்குச் சிரிப்புதான் அதிகமாக வுண்டாவது எதற்காகச் சிரிப்பு என்பதை மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்கொண்டல்லது வேறென்று கொண்டறிய வியலாது. இவர்களிடமிருந்து சுவைமிக்க விஷயம் ஏதேனும் வருகிறதா? என்ப தொன்றையே அடியேன் பார்ப்பவன். இவரும் இவரைச் சேர்ந்தவர்களும் ஆதரிக்கிற அர்த்தவிசேஷங்களுக்கும் தேசிக திவ்யஸூக்திகளுக்கும் என்ன சேர்த்தியுள்ளதென்று நெடுநாளாகவே என் மனம் குழம்பி யிருக்கின்றது. இந்த குழப்பத் தோடேயே என் வாணுள் முடியக்கூடாதென்றும், என்றேனுமொருநாள் ஒரு தெளிவுபெற்றே தீரவேண்டுமென்றும் ஸத்யம்ஸத்யம் மநோரதாநாம் அதடா: ப்ரவாஹா:.=ஸர்வஜ்ஞான ஸ்வாமி தேசிகனே "நாண்பெரியோமல்லோம் நாம் நன்றும் தீதும் நமககுரைப்பாருளரென்று நாடுவோமே" என்று நாடியோடும் போது அறிவொன்றுமில்லாத அடியேன் எவ்வளவிலேன்! ப்ரஸ்துதரான ஸ்வாமி ஜ்ஞாநுநுஷ்டானங்களில் எவ்வளவோ சிறந்தவர். திருவடிவாரத்தில் சிஷ்ய வ்ருத்தி செய்து கேட்டுத் தெளியவும் தட்டில்லை. அந்தத் துணிவுகொண்டே இஃதெழுதுவது.

கூரத்தாழ்வான் "கீடஸ்ய த்ருஷ்யத உதந்வதி விப்ருஷா(அ)லம்" என்று அருளிச்செய்கிருர். ஒரு பூச்சிக்கு விடாய் பிறந்தால் அதற்குக் கடலில் ஒரு திவலை போதாதோ? நீசனேனுடைய ஸந்தேஹங்கள் மிகச் சிறியனவேயன்றோ?

— ஸுதர்சன ஸந்தர்சனத்தில் முதல் பரிச்சேதம் முற்றிற்று. —

---

# ஸுதர்சன ஸந்தர்சனம்—இரண்டாவது பரிச்சேதம்

ஸ்ரீமதுபயவே. பண்டிதராஜ. D. T. ஸ்வாமியின் ஸ்ரீமுகமென்று ஸுதர்சன பத்ரிகையில் வெளிவந்திருப்பதில் முகப்பிலேயே காணப்படுகிற ஸ்ரீஸூக்தி யிது–

> "மாமுனிகளின் வாக்யமொன்றுகூட எடுக்காமல் வ. பூ. மீமாம்ஸா பாஷ்யகாரர் சொன்னதையே பின்பற்றி தேசிகன் ஸாதித்தது தவறு என்பதை....................." [இது D. T. ஸ்வாமியின் திருவெழுத்து.]

இப்படியும் ஒரு வாக்யசைலி யுளதே! அந்தோ! லேககருடைய விவக்ஷிதமென்ன? லேகனத்தின் வைகரியிருக்குமழகென்ன! என்று சிறிது நோக்கவேணும். தருமபுத்திரருக்குச் சூதாட்டத்தில் ருசி அதிகம், ஆனுல் ஆடத்தெரியாது" என்றொரு பழமொழி கேட்டதுண்டு. நிற்க. மேலே யெடுத்துக்காட்டின சிறு வாக்கியத்தில் "எடுக்காமல்"—"பின்பற்றி" என்றவற்றுக்கு எங்கே அந்வயம்? எடுக்காதவரும் பின்பற்றினவருமான நபர் யாவர்? என்று கேட்டால், தேசிகள் என்றுதானே விடையிறுத்தாகவேண்டும். தேசிகன், மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியைத் தொடாமல் மீமாம்ஸாபாஷ்யஸூக்தியைமட்டும் அநுஸரித்து ஏதோ அருளிச்செய்திருப்பதாக

வும், அதைத் தவறென்று ஒரு வித்வான் கண்டிப்பதாகவும் காட்டப்பட்டுள்ளது. "இல்லையில்லை, அப்படியில்லை; காட்டாமல் பின்பற்றினவர் வாசம்ருதவர்ஷியான ஸ்வாமியேயொழிய தேசிகரல்லர்; இங்கு வ்யவஹிதாந்வயங் கொள்க என்பர்.

''மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியொன்றைக்கூட உதாஹரியாமல்
ஸ்ரீ வசனபூஷண மீமாம்ஸாபாஷ்ய பங்க்திகளையேகொண்டு
தேசிகஸூக்தியில் தோஷோத்பாவநம் செய்ததை''

என்றெழுதியிருக்கவேணுமென்பது விசதவாக்சிகாமணிகளின் திவ்யஸூக்திகளில் அவகாஹனமுடையார்க்கன்றோ அறிய வெளிது. தேசிகனருளிச்செய்தது இன்னது, அதைத் தவறென்று நிரூபித்தவிதம் இன்னது—என்று விளக்கி அதில் அநுபபத்தியை விவரியாதது பெரிய குறையே "அவ்விரண்டும் எனக்குத் தெரியாமையால் விளக்கவில்லை'' என்பர்; ஸூந்ருதமுக்தமிதி ஸந்துஷ்யேம.

''வ. பூ. மீமாம்ஸாபாஷ்யகாரர்'' என்கிறார். அப்படியொரு பாஷ்யமிருப்பதாகக் கேட்டதில்லை. ''அர்த்தமாத்ராலாகவேந புத்ரோத்ஸவம் மந்யந்தே வையாகரணா:'' என்று கேட்டிருக்கிறோம்; ''லிகநஸம்க்ஷேப நிர்ப்பந்திநோ தீதிகாரா:'' என்றுகண்டிருக்கிறோம். இப்படியொரு ஸம்க்ஷேப நிர்ப்பந்தங்கொண்டவர்களை இன்றே காண்கிறோம். இவர்க்கு ஜ்ஞாதியான வொருஸ்வாமி காஞ்சியிலிருந்தார், அவர்க்கு இன்ஸ்பெக்டர் பேரிலும் கலெக்டர்பேரிலும் ஒரு காரணவிசேஷத்தினால் சீற்றமுண்டாயிற்று. அதற்கு அவர் போக்குவீடுவிட்டவிதம் யாதெனில், இன்ஸ்பெக்டர் கலெக்டர் என்று யாராவது சொன்னால் 'அடா அறிவு கேடனே! அவன்களுக்கு அர்பட்டமென்னடா? இன்ஸ்பெக்டன், கலெக்டன் என்று சொல்லு; அர்போட்டு என்காது கேட்கச் சொல்லாதே யென்று அதட்டுவர். அவருடைய தம்பி. யாராவது ஸ்ரீகுணரத்நகோச மென்றால், "ஸ்ரீசேர்க்கத் தகாதவற்றுக்கெல்லாம் ஸ்ரீ சேர்க்கிறாயே பாவீ! குணரத்நகோசமென்று சொல்லுடா'' என்று சிக்ஷிப்பர். அன்னவர்களது திரளிலே சேர்ந்தவர்கட்கு இது வியப்பன்றே.

## வ்யுத்பந்நர்கள் விமர்சிக்க வேண்டியதொன்று.

''தேசிகன் அவர் ஸித்தாந்தப்படி அர்த்தம் சொன்னார்'' என்றொரு வாக்யமெழுதியுள்ளார். இதில் 'அவர்' என்றதனால் விவக்ஷிதர் யாரோ? தேசிகனென்று இவர்க்கு விவக்ஷிதம். தேவதத்தன் தன் வீட்டுக்குச் சென்றானாகில் ''தேவதத்த: தஸ்ய க்ருஹம் ஜகாம'' என்னலாமோ வென்பதை சாஸ்த்ரஜ்ஞர்களும் வ்யுத்பந்நர்களும் விவேகிக்கக் கடவர்கள். இதெல்லாங்கிடக்கட்டும். இதெல்லாம் ஒருவாறு ஸமாஹிதமாகுமென்றே கொள்வோம். முக்கியமான விஷயங்கேண்மின்

''அவரை ரக்ஷிப்பதற்காக தேவர் இப்போது சொல்லுகிறபடி''

என்றெழுதியுள்ளார். வாகம்ருதவர்ஷி வரதார்ய ஸ்வாமியை ரக்ஷிப்பதற்கு ஸுதர்சன பத்ராதிபஸ்வாமி முயன்றெழுந்ததாக D. T. ஸ்வாமியால் தெரிவிக்கப்பட்டதாகிறது. ஸ்ரீவரதாசார்யஸ்வாமி ஏதோ ஸங்கடநிலையில் விழுந்துவிட்டதாகவும், ஒருவரால் ரக்ஷைபெற வேண்டியநிலைமை அவர்க்கு நேர்ந்துவிட்டதாகவும், பத்ரா

திபஸ்வாமி ரக்ஷைசெய்து அவரை ஆபத்தில் நின்றும் மீட்க முயன்றிருப்பதாகவும் காட்டவருகிறார், யார்? D. T. ஸ்வாமி. உண்மையில் இங்கு ரக்ஷ்யத்வமுமில்லை, ரக்ஷகத்வமுமில்லை. மூலத்தின் கருத்தை அறிஞரொருவர் விவரித்தால் மூலகாரரை இவர் ரக்ஷிக்க வந்தார் என்பாருண்டோ? மதுராந்தகம் ஸ்வாமியை இவர் ரக்ஷிக்கப் பாடு படுவதும். இவரை அவர் ரக்ஷிக்கப் பாடுபடுவதும், அந்தத: இரண்டும் பழுதாகி யொழிவதும் ப்ரபஞ்சப்ரஸித்தம். தேசிகன் ஓரிடத்தில் "காணிலு முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவரை" என்ற திருமழிசைப்பிரான் பாசுரத்தை விவரித்தருளுகையில்—"தங்களை அடைக்கலம்புகுந்திருப்பாரை ரக்ஷிக்க மாட்டாதே, தங்களுக்கொரு விபத்துவந்தால் தங்களைத் தாமே ரக்ஷித்துக் கொள்ளவும்மாட்டாதே நிற்கும் தேவதாந்தரங்கள்" என்றருளிச்செய்கிறார்.

வணங்கலிலரக்கனை நோக்கித் திருவடிசொன்ன வார்த்தைகளுள் இரண்டு வார்த்தைகள் பொன்னுலகையும் புவனி முழுவதையும் விலையாகக்கொள்ளுமவை.

"தேவாச்ச தைத்யாச்ச நிசாசரேந்த்ர! கந்தாவ வித்யாதரநாகயக்ஷா:,
ராமஸ்ய லோகத்ரயநாயகஸ்ய ஸ்தாதும் ந சக்தாஸ் ஸமரேஷு ஸர்வே."

என்று முன்னம் சொல்லி, பின்னை

"ப்ரஹ்மா ஸ்வயம்பூச் சதுராநநோ வா ருத்ரஸ் த்ரிநேத்ரஸ் த்ரிபுராந்தகோவா,
இந்த்ரோ மஹேந்த்ரஸ் ஸுரநாயகோவா த்ராதும் ந சக்தா யுதி ராமவத்யம்"

என்றார். முந்தின ச்லோகத்தில் "ஸ்தாதும் ந சக்தாஸ் ஸமரேஷு ஸர்வே" என்றும், பிந்தின ச்லோகத்தில் "த்ராதும் ந சக்தா யுதி ராமவத்யம்" என்றும் சொன்னதின் இன்சுவைப்பொருளை நமது ஸ்ரீராமாயணப்ரவசனங் கேட்டார் வாய்க் கேட்டுணர்வது. "தே ஹி நோ திவஸா கதா"

அவரை ரக்ஷிக்க இவரெழுந்தாரென்று அஸ்தாநே அகாண்டே எழுகினதிலிருந்து நாம் எவ்வளவோ எழுதவேண்டியிருக்கின்றது. முக்கியமாகச் சிலசில மட்டும் எழுதுகிறோம். ரக்ஷ்யர் ரக்ஷை பெறுமல் தவிக்கிறபடியையுங் காட்டுவோம்.

மூன்றுநான்கு வருடங்களுக்கு முன்பு ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வாமி ஸம்ப்ரதாய ஸுதா என்றொரு சுவடி யெழுதி வெளியிட்டாரென்பதும், அது நமது கண்ணில் பட்டஅன்றே ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய மென்கிற நூலால் மறுக்கப்பட்டு முடிந்ததென்பதும் உலகறிந்தது. யாரும் மறக்கமுடியாததுமாம். அந்த ஸுதாவுக்கு நம் D. T. ஸ்வாமி ப்ரஸ்தாவநையொன்று எழுதிக்கொடுத்திருக்கிறார். அதிலுள்ள சில வாக்கியங்களைக் கேண்மின்;

"இந்த (ஸுதா) க்ரந்தம் வெகு அழகாக அமைந்திருக்கின்றது; அடிமுதல் நுனிவரையில் ஒரு அக்ஷரங்கூட விடாமல் வாசிக்கும்படி குதூஹலமுண்டாயிற்று. ....... தேசிக ஸம்ப்ரதாயத்தையே சேர்ந்த சிலர் பிறருடைய மாயப்பேச்சினால் கலங்காமலிருக்கவும் கலங்கினவர்கள் தெளிவு பெறவும் இந்த ஸ்வாமியின் நிரூபணங்கள் மிகவும் உபயோகப்படுகின்றன."............இத்யாதி.

* உந்நதம் பதமவாப்ய * என்கிற சுலோகம் நினைவுக்கு வரும்படியாக இங்ஙனே யெழுதிக்கொடுத்தவர் அவர்க்கொரு பங்கம் நேர்ந்தால் அதைப் போக்கிக் கை கொடுத்து ரக்ஷிக்கக் கடமைப்பட்டவரல்லவா? ஸுதா வெளிவந்தவுடனே அந் நூல் அடைந்த பங்கம் தெரிந்திருந்தும் ரக்ஷிக்க முன்வராதது ஸௌஹார்தத்திற் கும் ஸ்வவைதுஷ்யத்துக்கும் ஒக்குமா? 'ஐயோ! பங்கமடைந்த செய்தி எனக்குத் தெரியவே நெரியாதே, தெரிந்திருந்தால் கைகொடுத்துத் தூக்கிவிடாமலிருப் பேனா?' என்னக்கூடும். ததாஸ்து. கஜேந்த்ராழ்வான் முதலைவாய்க்கோட்பட் டுத் துடித்தது ஒன்றிரண்டுநாளன்றிக்கே பலகாலம் என்று கேட்டிருக்கிறோம். ஒரு காலவிசேஷத்தில் துயர்தீரப்பெற்றதன்றோ? அப்படி மதுராந்தகம் ஸ்வாமி இப்போதரவது துயர்தீரப்பெறலாமே.

நைஷதகாவ்யத்தில் (ஹம்ஸவாசா) தமயந்தீ ஸௌந்தர்ய வர்ணனம் பண்ணுமிடத்தில் "ஸுஷமாவிஷயே பரீக்ஷணே நிகிலம் பத்மம் அபாஜி தந்மு காத், அதுநாபி ந பங்கலக்ஷணம் ஸலிலோந்மஜ்ஜநமுஜ்ஜதி ஸ்புடம்" என்று சுவையின்றிக்கே பேசி வைத்தான் ஸ்ரீஹர்ஷன. அது ஏறிட்டுச் சொன்னது. இவ்விடத்து விஷயம் அப்படிப்பட்டதன்று. "த்ராதும் ந சக்தா யுதி ராமவற்யம்" என்று திருவடி சொன்னது கதையாய்க் கிடக்கிறது. இது கதை யன்று. கையி லங்கு நெல்லிக் கனியாகக் காட்டக் கூடியவை பலபல; விரைவில் "மதுராந்தக ஸ்வாமி மண்டன மாலிகா" என்று ஒரு சிட்டா வெளிவரக்கூடும். அதனால், அவரை ரக்ஷிக்கமுடியுமா முடியாதா? என்கிற ஆலோசனை விளைந்தே தீரும். அந்த ஸமய விசேஷம் ஸந்நிஹிதமே யென்று இப்போது ஆறியிருப்பது. இப்போ தைக்கு ஒன்றேயொன்று காட்டுவோம்; ஆந்தனையும் ரக்ஷித்தருளமுயலுக.

இப்போது நாம் காட்டும் விஷயம் எப்படிப்பட்டதென்றால், உலகில் ஸம்ஸ் க்ருதம் படித்தவர்களென்று எத்தனை மதங்களில் எத்தனை வித்வான்களிருக் கின்றார்களோ அத்தனைபேரும் புகுந்து பரிசீலிக்கத்தக்க விஷயம். விஷயத்தை விளக்குகிறேன், கேட்டருளவேணும். ஸ்வாமி ரக்ஷணீயர்தானா? சக்யரக்ஷணர் தானா? என்பதை முன்னம் திருவுள்ளத்தில் தெளிந்துகொண்டு பின்னை சக்யமான (அல்லது) யோக்யமான வழியில் கைவைத்தருளவேணும்.

**(மதுராந்தகம்ஸ்வாமியின் திருவாக்கில் ஏற்கனவே விமர்சித்ததும் விமர்சிக்க வேண்டியதுமான விஷயம்.)** (ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யாத்.)

சிறந்த விஷயத்தில் க்ரந்தமெழுதக் கைவைப்பவர்களுக்கு அபாதிதமான சாஸ்த்ரவ்யுத்பத்தியும் ஸாஹித்யவ்யுத்பத்தியு மிருக்கவேண்டும். *சதிரமென்று தம்மைத் தாமே சம்மதித்து* என்று திருவாய்மொழியிலருளிச்செய்கிறபடி தம்மைத் தாமே சாஸ்த்ர சதுஷ்டயாதிகாரியாக நினைத்துக்கொள்வதிலும் வெளியிட்டுக் கொள்வதிலும் சிரமமில்லை. இவருடைய வ்யுத்பத்தி எத்தகைத் தென்பதை முன் னம் ஒரு சிறு விஷயத்தில் விளக்கிவிடுகிறேன். 'லக்ஷ்மி உபாயத்வஸம்ரக்ஷணம்' என்று மகுடங்கொடுத்து ஓர் அதிகாரமிட்டார்; அதில் ச்ருதப்ரகாசிகாசார்ய ருடைய சரணாகதி கத்யபாஷ்யத்திலிருந்து 'ஒரு பங்க்தியை உதாஹரித்து அர்த்த மெழுதுகிற அழகைக் காண்மின்;

**''ச்ரியம் ப்ரபத்ய தத்ஸந்நிதௌ மூலமந்த்ரேண ஸ்வரூபாநுரூப புருஷார்த்த ப்ரார்த்தநம் ததுபாயப்ரார்த்தநாபர்யந்தம் க்ருத்வா"**

என்பது இவருதாஹரித்த ஸ்ரீஸூக்தி. இதன் பொருளென்னவென்றால், பெரிய பிராட்டியாரைப் பணிந்து அவள் பக்கலிலே பகவத்கைங்கர்யமாகிற ஸ்வரூபாநுரூப புருஷார்த்தத்தையும், அதற்கு உபாயமான தச்சரணாகதி நிஷ்பத்தியையும் ப்ரார்த்தித்து என்பதே; இது தவிர வேறுபொருள் கிடையாது. ஸாதாரணபடிப் பாளிகளும் வேறொருபொருள் சொல்லமாட்டார்கள். சொல்லமுடியாது. பிராட்டியைப் பணிந்தவுடனே *பாரமார்த்திகேதயாதி சூர்ணையில் நித்யகைங்கர்ய ப்ராப்த்யபேக்ஷயா* என்றும் *பகவச்சரணாரவிந்த சரணாகதி: அஸ்து மே* என்றுமுள்ள ஸ்ரீஸூக்தியினால் ஸ்வரூபாநுரூப புருஷார்த்தமும் அதற்குறுப்பான (சரணாகதியாகிற) உபாயத்தின் நிஷ்பத்தியுந்தானே ப்ரார்த்திக்கப்பட்டிருக்கிறது. ஸம்ஸ்க்ருத ஜ்ஞானமுள்ள யாரும் இதைத்தான் பொருளாகக் கூறுவர். இது ஸம்ப்ரதாய பேதவிசார விஷயமன்று. எந்த மதஸ்தரும் விமர்சிக்கக்கூடிய பொதுவிஷயமேயிது. வ்யுத்பத்தி பரீக்ஷணமிது. ப்ரக்ருதஸுதாகாரர் என்ன பொருளுரைக்கிறாரென்று பாருங்கள்; "பிராட்டியின் பக்கல் புருஷார்த்த ப்ரார்த்தனமும் உபாயத்வ ப்ரார்த்தனமும் செய்து" என்று எழுதியுள்ளார். முன் பக்கத்தின் தலைமேல் லக்ஷ்மி உபாயத்வ ஸம்ரக்ஷணம் என்று மகுடமிட்டிருக்கிறார். லக்ஷ்ம்யுபாயத்வத்தை ச்ருத ப்ரகாசிகாசார்யர் ஸாதித்துவிட்டதாக மருண்டுவிட்டார். ஐயோ பாவம்! இவரெடுத்த ஸ்ரீஸூக்தியில் 'உபாயப்ரார்த்தநா' என்றிருக்கிறதேயொழிய 'உபாயத்வ ப்ரார்த்தநா' என்றில்லை. உண்மையில் ஸ்ரீஸூக்தியும் அங்ஙனே கிடையாது, இவரும் அங்ஙனே யுதாஹரிக்கவில்லை. 'உபாய ப்ரார்த்தநா' என்பதற்கு உபாய பூதவஸ்துவின் ப்ரார்த்தனையென்று அர்த்தமேயல்லது உபாயத்வப்ரார்த்தனையென்று ஒருநாளும் அர்த்தமாகாது. தர்மதர்மிஜ்ஞானமில்லாத நையாயிகர்கள் பலருளர்; அன்னவர்கள் "பூதலே கடத்வஸ்ய வர்த்தமாநாத்" என்றும் ''கடபூதல வர்த்தநேத்வாத்" என்றும் சொல்லிக்கொண்டு அட்டஹாஸம் செய்வர்கள்.

ப்ரக்ருத ச்ருதப்ரகாசிகா ஸூக்தியை உதாஹரிக்குமிவர் அதற்கு என்ன அவதாரிகையிட்டிருக்கிறாரென்பதையும் கண்திறந்து காண்மின்: "ச்ருதப்ரகாசிகா சார்யார் தமது சரணாகதிகத்ய வ்யாக்கியானத்திலே பிராட்டியின் ஸாக்ஷாதுபாயத்வத்தை ஸம்ப்ரதாயஸித்த மென்றருளிச் செய்திருப்பது உற்றுநோக்கத்தக்கது" என்றெழுதிவிட்டு உடனே அவருடைய ஸ்ரீஸூக்தியை தேவநாகரியிலும் தமிழிலும் பதிப்பித்துள்ளார். பிராட்டி பக்கலில் உபாயத்வ ப்ரார்த்தனம் செய்கிறாரென்று எழுதுகிறாரே, இது சப்தலப்யமா அன்றா? என்கிற விசாரம் கிடக்கட்டும்: இதற்கு என்ன கருத்தையா! என்றால் திசைதொறும் விழிப்பர். உபாயத்வ பிரார்த்தனை பண்ணுவதாவது இன்னது என்று சொல்லிக் கொடுத்து இவரை ரக்ஷிக்கவல்லாருளரோ?.

தேவதாவிசேஷத்தினிடத்தில் புத்ரப்ரார்த்தனை பண்ணுகிறாரென்றால் 'எனக்கு நீ புத்திரனாக வேணுமென்று பிரார்த்திக்கிறார்' என்று பொருள் கூறுவர்

5

போலுமிவர். D. T. ஸ்வாமி இந்த ஸுதாவை ஆதியோடந்தமாக ஓரக்ஷரமும் விடாமல் ஊன்றிப்பார்த்ததாக எழுதியிருப்பதால் இதில் எவ்விதமான அநுப பத்தியையும் அவர் கிரஹிக்கவில்லையென்று தெரிகிறது. பண்டிதராஜரே க்ரஹியாதபோது மற்றுள்ள பண்டிதர்கள் எப்படி க்ரஹிக்கப்போகிறார்கள். உபாய ப்ரார்த்தநா என்பதற்கு மதுராந்தகஸ்வாமி கொண்டருளினபொருள்தான் மிகச் சீரிய பொருள் என்றும், பாவப்ரதாநநிர்தேசமது என்றும் ஸாதித்து அவரை ரக்ஷித்தேவிடுவர். ரக்ஷிக்கவேணுமென்றும் பிரார்த்திக்கிறேன்.

ரகுவம்சத்திலுள்ள "ஹையங்கவீநமாதாய கோஷவ்ருத்தாந் உபஸ்திதாந், நாமதேயாநி ப்ருச்சந்தௌ வந்யாநாம் மார்க்கசாகிநாம்." என்கிற ச்லோகத்தை ப்ரவசனம் செய்கிற ஓர் உபாத்யாயர், (கோஷவ்ருத்தாந்) என்பதற்கு [கூச்சலிட்டுக் கொண்டுவருகிற கிழவர்களை] என்றும், (மார்க்கசாகிநாம்) என்பதற்கு [சிலைவழிகளை] என்றும் பொருள்கூறினார். அதைக்கேட்ட பலர் ஆக்ஷேபித்தார்கள். ப்ரவசநகர்த்தாவின் மாமனார் வித்யாலயாத்யக்ஷர். இந்த சர்ச்சை அவரிடம் சென்றது அவர், ப்ரவசனகர்த்தா சொன்ன பொருள்தான் ஸாதுவென்றும், காட்டில் பயங்கரமான மிருகங்கள் திரியுமாகையாலே அவை விலகிப் போவதற்காக இடையர்கள் கோஷம் போட்டுக்கொண்டே வருவது இயல்பு என்றும், காட்டில் குறுக்கே நெடுக்கே பலபலவழிகள் பிரியுமாகையாலே திகைக்க வேண்டாமல் ருஜுவானவழியைத் தெரிந்துகொள்வதற்குக் கிளை வழிகளைப்பற்றிக் கேட்டுக்கொண்டேபோவது ஸஹஜம் என்றுங்கூறி இது தான் ஸமஞ்ஜஸமான பொருளென்று தீர்த்துவிட்டார். மதுராந்தகம் ஸ்வாமியை ரக்ஷிக்கக் கடமைப் பட்ட தாதாசார்யஸ்வாமி ப்ரத்யுத்பந்நமதியாய், *பாஷ்யாதி க்ரந்த லேசோபி அவஹிதமநஸாம் ஐதமர்த்த்யம் பஜேத* என்கிற அதிகரணஸாராவளியின் லாரி போர்ட்டான ச்லோகத்தைக் கைவிளக்காகக்கொண்டு "அயமேவார்த்த:. கா க்ஷதி:? கா நாம ஹாநி:? என்று கைகொடுத்து ரக்ஷித்துவிடலாம்; விடுவர். ... *

— ஸுதர்சன ஸந்தர்சனத்தில் இரண்டாவது பரிச்சேதம் முற்றிற்று. —

## ஸுதர்சன ஸந்தர்சனத்தில்—மூன்றாவது பரிச்சேதம்

ஸ்ரீமதுபயவே. பண்டிதராஜ மஹாஸ்வாமியை நோக்கிச் சில கேள்விகளை ஸவிநயம் ஸாஞ்ஜலிபந்தம் கேட்கப் போகிறேன். இவை புதிய கேள்விகளல்ல; ஏற்கனவே கேட்டிருந்தவையே. அவற்றை யெல்லாம் இப்போது கேட்கப்புக வில்லை. சிற்சிலவற்றையே கேட்க விருப்பம். இக்கேள்விகளுக்கு விடைகளை அச்சிட்டுப் பிரசுரஞ் செய்ய வேணுமென்று அடியேன் விரும்பவில்லை. திருவடி பணியும் அந்தேவாஸிகளுக்குக் கூறி அவர்களை த்ருப்தராக்கினால் போதும். புநர்வஸு பத்ரிகையின் ஆசிரியரான ஸ்ரீமதுபயவே, சேட்லூர். கிருஷ்ணமா

சாரியர் ஸ்வாமி மஹாவிவேகியும் மத்யஸ்தஹ்ருதயருமாயிருப்பவர். அவர்க்குத் தினவடங்கத் திருவாய் மலர்ந்தருளினால் அவ்விஷயங்களை யெல்லாம் அவர் தமது பத்ரிகை மூலமாகப் பரவவிடுவர்.

## —இங்கு அவதாரிகையாகச் சில வார்த்தைகள்—

ஸ்ரீராமாநுஜன் 132ல் நாம் ஒன்று எழுதியிருந்தோம். D. T. ஸ்வாமியானவர் அதை மறுக்க நினைத்து அதை அப்படியே (தமது பாரிஜாத புஷ்பமென்னும் சுவடியில் பக்கம் 78ல்) உதாஹரித்திருக்கிருர். அதை அநுவதிக்கிறேன் முன்னம்.

"ஸ்ரீராமாநுஜன் 132ல் (எழுதியிருப்பதாவது) ஸம்ப்ரதாய விஷயமாக நாமெழுதும் நூல்களுக்கு ஜீவநாடியான விஷயங்கள் இரண்டே; (1) தேசிகன் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளை மணவாளமாமுனிகளுக்கும் மேலாகக் கண்டபாடம் செய்திருந்தவர்; அந்த ஸ்ரீஸூக்திகளையே பற்றுக்கோடாகக் கொண்டு எழுதுமவர் தேசிகன்—என்கிறவிது ஒரு விஷயம் (2) இவ்வுண்மையை அறியகில்லாதவர்களாய் (அல்லது) அறிந்துவைத்தும் அபலபிப்பவர்களான நவீனர்கள் தேசிகனைப் பெரியவாச்சான் பிள்ளைக்கு விரோதியாக எழுதுவதும் அந்த தேசிகனேடு தங்களுக்கொரு தொடர்பு இருப்பதாக அபிநயிப்பதும் மிகத்தவறு—என்கிறவிது மற்ருெருவிஷயம்."

இது D T. ஸ்வாமியின் அநுவாதம்; உண்மையில் நாமெழுதியிருப்பதையே எடுத்துக்காட்டினராதலால் இது அந்யூநாநதிரிக்தமான அநுவாதமே. மேலே உதாஹரித்த வாக்யச்ரேணியிலுள்ள ஜீவநாடியெனப்பட்ட இரண்டு விஷயங்களும் நம்முடைய நூல்களுக்கு உயிரானவை யென்பதை நாம் ஒரு காலும் அபலபிக்க மாட்டோம். அவ்விரண்டு விஷயங்களையும் பாரத ராமாயணுதிகளைப் போல் விவரித்து நாமெழுதி வெளியிட்டுள்ள நூல்கள் உலகம் பரவியுள்ளன. எத்தனை காலமுமெத்தனையூழியும் போராடினுலும் "காசினியிலண்ணங்க ராசிரியர் நூல்கள் தமிழ், பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே" என்று (Late) ஸேதுபதி ஸம்ஸ்தான மஹாவித்வான். ரா. ராகவையங்கார் ஸ்வாமி பொறித்து வைத்திருக்கிறபடியேதான் என் பதில் ஐயுற வேண்டா; ஐயுறுவாரில்லை. மேலே குறித்த இரண்டு விஷயங்களில் முதல் விஷயத்தை முன்னமெடுத்துக் கொள்ளுகிறேன்.

> ஸ்ரீ தேசிகன் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளை மணவாளமாமுனிகளுக்கும் மேலாகக் கண்டபாடம் செய்திருந்து அந்த ஸ்ரீஸூக்திகளையே பற்றுக்கோடாகக் கொண்டு அர்த்த விசேஷங்களை ப்ரவசனம் செய்து வந்தாரென்பதற்கு அவருடைய தாத்பர்ய ரத்னுவளியும் ஸாரமுமே ஸாக்ஷி.

இந்த முதல்விஷயம் நமது பலநூல்களில் பரந்துளது. நம்மாழ்வார் (பெரிய திருவந்தாதியில் *சோம்பாது இப்பல்லுருவையெல்லாம் படர்வித்த வித்தா!* என்கிருர். அதை மொழிபெயர்த்தருளும் பட்டர் * நிஸ்தந்த்ராமேஸ் தவ நியமத:* இத்யாதியருளிச்செய்கிருர். [இப்படி இருவரும் பகவத்க்ருஷியில் சோம்பலில்லா

மையைக் கூறினர்,] இங்ஙனமே சோம்பலைவிட்டு, [*ஹந்து தந்த்ராலுதாம் வ:* என்கிற ஸூதர்சநசதக ஆசாஸனம் பலிக்கப்பெற்று] ப் பலநூல்களில் பன்னி யுரைத்திருக்கிறோம். "ஸ்ரீபாஷ்யத்தை யநுஸரித்து அதிகரண ஸாராவளி ஸாதித்தார்; ச்ருதப்ரகாசிகையை யநுஸரித்து தத்வடீகை ஸாதித்தார்" என்று ஒருவர் சொன்னால் இதை மறுக்க முயல்வாருமுண்டோ? ஸ்ரீபாஷ்யோபக்ரமத்தில் "பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம்... தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்யாஸ்யந்தே. என்று ஸ்வாமி ஸாதித்திருப்பதைக்கண்ட ஒரு சாஸ்த்ரி அஸஹிஷ்ணுதையாலே ஆக்ரஹம் பொங்கி $ அதை மறுத்துரைக்க எழுந்ததுபோல நம் D. T. ஸ்வாமியும் இதை மறுக்க எழுந்தார். எதை? பெரிய வாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளை யடியொற்றியே தேசிகன் அர்த்த நிர்வாஹங்கள் பண்ணியருளினரென்பதை. இஃது இற்றை நேற்றைய கதையன்று; இருபத்தைந் தாண்டுகளாக; அதற்கும் மேலாக—என்னலாம். இடையிடையே சிறிது அடங்கி நிற்கும். திடீரென்று ஒருஸமயம் தலையெடுக்கும். உத்தரராமசரிதத்தில் * புநரபி தைவதுர்விபாகாத் ஆலர்க்கம் விஷமிவ ஸர்வத: ப்ரஸ்ருப்தம்* என்றது இதற்கே ஏற்கும். இனிமேலும் தொடராதபடி செய்திடுவோமிப்போது.

**ஒருவரும் மறுக்கவும் மறக்கவும் தகாத விஷயமிது கேளீர்.**

தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில்—பெரிய திருமொழிப் பாசுர மொன்றின் பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியான பங்க்தியை அப்படியே யெடுத் துக்காட்டியுள்ளாரென்பதும், ஸச்சரித்ர ரக்ஷையில் *கரியமேனிமிசை யென்கிற திருவாய்மொழிப் பாசுரமொன்றின் பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானத்தி லுள்ள பொருளை ஆசார்ய நிர்வாஹ மென்று காட்டி அதைக்கொண்டு ப்ரதிபக்ஷி துர்வாத நிரஸநம் செய்திருக்கிறரென்பதும் நம்மால் பலகால் எடுத்துக் காட்டப் பட்டுள்ளது; அஸூயுக்களாலும் அந்யதாகரிக்க முடியாதது பெரிய வாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளை தேசிகன் எத்தனை யிடங்களில் உபஜீவித்திருக்கிறரென் கிற விசாரம் தனிப்படவிருக்கட்டும். அது பிறகு ஆகும். மேலே நாம் எடுத்துக் காட்டிய இரண்டிடங்களில் விபரீதமாக வாயைக் கையைத் திறக்கமுடியாதென்பது திண்ணம்: இதமாஸ்தாம்

இனி, திருக்குருகைப்பிரான் பிள்ளானைப்பற்றி யெடுத்துக்கொள்வோம். தேசிகன் எந்த நூலிலாவது பிள்ளானையோ அவருடைய ஆறாயிரப்படியையோ ப்ரஸ்தாவித்திருக்கிறாரா! என்று கேட்கிறேன். மறுக்கவொண்ணாத வுண்மையைத் தெரிவிக்கின்றேன் கேண்மின். ஸ்ரீ வசனபூஷணத்தில் "தன்னால் வரும் நன்மை விலைப்பால்போலே..."—"மதிராபிந்து மிச்ரமான சாதகும்பமய கும்பகத தீர்த்த ஸலிலம்போலே" என்னுமிரண்டு ஸ்ரீஸூக்திகள் பிள்ளானுடையவையாக எடுத் துக்காட்டப்பட்டிருக்கின்றனவே; அவ்விரண்டைமட்டுமே ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்தில் தேசிகன் கொண்டார். அதிலும் பிள்ளானென்று திரு

$த்ரமிடாத்ரேய தர்சனமென்றெழுதி வெளியிட்ட மயிலை ஸம்ஸ்க்ருத காலேஜ் உபாத் யாயரான போலஹம் சாஸ்திரிகளுக்கு மறுப்பாக நாமெழுதி வெளியிட்டுள்ள சாங்கரசிரோ பூஷாவில் இது காண்க.

நாமம் குறித்தது *தன்னுல் வரும் நன்மை யென்கிற ஓரிடத்தில்மட்டுமே; மதிரா பிந்துமிச்ரமான இத்யாதியை நேராக எடுத்துக்காட்டாமலும் அது பிள்ளான் ஸ்ரீஸூக்தியென்றுகூடக் காட்டாமலும் அதைத் தாம் ஒருகாரிகையிட்டுக் கண்டித்தாரத்தனே. காரிகையினுல் செய்தது கண்டனமே யென்பதை ஒரு ஸ்ரீவைஷ்ணவரும் கவனித்ததில்லே. இதைச் சிறிது விவரிக்கிறேன்.

**ஸுதர்சன ஸந்தர்சனமென்கிற இந்நூலுக்கு இதுதான் உயிர் நிலே.**

''மத்யோபஹத பாத்ரஸ்த தீர்த்தத்ருஷ்டாந்தவர்ணநம், அஹங்காராந்வயே துஸ்யாத் ப்ரபத்தாவபி பக்திவத்''. என்பது தேசிகனிட்ட காரிகை; இதில் பூர்வார்த்தத்தாலே *மத்யோபஹதபாத்ரஸ்த தீர்த்தத்தை த்ருஷ்டாந்தீகரித்து ஒருவர் பக்திக்குக் குறைகூறினதாகக் காட்டி உத்தரார்த்தத்தாலே அதற்குக் கண்டனம் ஸ்பஷ்டமாகச் செய்யப்பட்டிருக்சின்றது. மத்யோபஹதபாத்ரஸ்த தீர்த்த த்ருஷ்டாந்தவர்ணனம் செய்தவர் யாரென்று கேட்டால் திருக்குருகைப்பிரான்பிள்ளான் என்று சொல்லித் தீரவேணுமேயொழிய வேருெருவரை சொல்லமுடியாது. ''மதிரா பிந்துமிச்ரமான...'' இத்யாதி ஸ்ரீ வசநபூஷணோபாத்த ஸ்ரீஸூக்தியைக் கொண்டுதானே *மத்யோபஹதபாத்ரஸ்தேத்யாதி காரிகை அவதரித்தது. * தன்னுல் வரும் நன்மை யித்யாதியான பிள்ளான் வார்த்தைக்கு ஒரு தாத்பர்யவர்ணனம் பண்ணினதுபோலே இதற்கும் பண்ணியிருக்கலாம். அல்லது, ''பிள்ளான் இப்படி யொருகாலும் பணித்திருக்கமாட்டார்'' என்ருவது எழுதியிருக்கலாம். இரண்டும் அஸாத்யமாகவே கண்டித்துத் தொலேப்பதற்குமேல் கர்த்தவ்யமில்லே யென்று துணிந்து *இதி மந்தைரிதம் ப்ரோக்தம்* என்ரே *க்ரந்த ஜ்ஞைரபஹாஸ்யம் தத்* என்ரே எழுதக் கைவராமல் ''இது பிள்ளான் திருமுடியில் கட்டின திருப்பரிவட்டம்'' என்று அடியேனெருவன்மட்டுமே தெரிந்துகொள்ளும்படியாக காரிகையிட்டுக் கடாசிவிட்டார். இது இப்படித்தானு? வேறுவிதமா? என்று விசிகித்ஸை யுண்டாகும் சிலருக்கு; இங்குத் தெரிவிக்கு மிதிஹாஸம் கேளீர்.

ஸ்ரீ மத் பரமஹம்ஸேத்யாதி. இஞ்சிமேடழகியசிங்கர் பூர்வாச்ரமத்திலிருந்தே ஸந்நிகர்ஷாதிசயத்தாலே அடியேன் மீது பரமக்ருபாளுவென்பதைப் பலகால் விளக்கியிருக்கிறேன் தானேயெழுதிய தன் சரிதையிலுமிதைக் காணலாம். ஸ்ரீ ஸ்வாமி திருவெவ்வுளூரிலெழுந்தருளியிருந்தபோது ஸ்வாமியை ஸேவிப்பதற்கென்றே ஒருநாள் அவ்விடம் விடைகொண்டேன். ஸ்ரீ ஸ்வாமி ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரத்திற்கு ஸுபோதினி யென்ருெரு வியாக்கியான மருளிச்செய்துகொண்டிருக்கிற ஸமயமது. இதற்காகவே சிலமாதங்கள் காலக்ஷேபத்தையும் நிறுத்தி நிபுணர்களான சில அந்தேவாஸிகளே உடன் வைத்துக்கொண்டு வியாக்கியான லேகனம் செய்தருளியாகிறது. அடியேன் விடைகொண்ட ஸமயத்தில் சரமச்லோகாதிகாரம் வியாக்கியானித்தாகிறது. அதில், ''அந்யவிச்வாஸ ஸித்த்யர்த்தம் பக்த்யுபாயவிதிம் வதந், ஸர்வ சாஸ்த்ரேஷ்வவிச்வாஸம் ஆதத்தே முகபேதத:'' என்கிற காரிகையைப்பற்றி சிஷ்யர்களோடு சர்ச்சை நடந்துகொண்டிருக்கிறது. இதில் வதந் என்று ஏகவசனம் ப்ரயுக்தமா யிருக்கிறது; அந்த வ்யக்தி

விசேஷம் இன்னதென்று தெரியவில்லை என்று ஸாதித்துக்கொண்டிருந்தார். அப்போது அடியேன் அங்கிருந்தபடியால் "இது ஸ்ரீ வசனபூஷணத்தில் ஒரு ஸ்ரீஸூக்தியைப்பற்றி ஸாதிக்கிறபடி; "வதந் லோகாசார்ய:" என்றெழுதலாமென்றேன். உடனே ஸ்ரீ வசனபூஷண ஸ்ரீகோசத்தை எடுத்துவர நியமித்து அந்த இடத்தை யெடுத்துக் கொடுக்கப்பெற்று ஒரு நாழிகை கடாக்ஷித்து, "ஆமாம், இந்த இடந்தான் ப்ரத்யவஸ்தான லக்ஷ்யம்" என்று ஸாதித்தார், ஆனாலும் "வதந் லோகாசார்ய:" என்று என்கையாலே யெழுதமாட்டேன், கோபி வாதீ என்றெழுதி விடுகிறேனென்று ஸாதித்தார். "வாதீதி சேஷ:" என்றெழுதி யிருப்பதை அச்சுப் பிரதியிலும் காணலாம்.

பிறகு அடுத்தகாரிகை—"மத்யோபஹத பாத்ரஸ்த தீர்த்தத்ருஷ்டாந்த வர்ணநம், அஹங்காராந்வயேது ஸ்யாத் ப்ரபத்தாவிவ பக்திவத்." என்பது. இதிலும் சர்ச்சை ஏற்பட்டது. 'இந்த தீர்த்தத்ருஷ்டாந்தவர்ணனமும் லோகாசார்யருடையதுதானோ?" என்று கேட்டருளினார்; "லோகாசார்யர் எடுந்துக் காட்டினதேயொழிய அவருடையதன்று, திருக்குருகைப்பிரான் பிள்ளானுடையது—என்று அதையும் எடுத்துக்காட்டினேன். வெகுநாழிகை கடாக்ஷித்து விட்டு "இது பிள்ளானுடைய ஸ்ரீஸூக்தியையே ப்ரத்யாக்க்யானம் செய்ததாகிறதே" என்றார்; "அது அடியேனுக்குத் தெரியாது; அதை நிர்ணயிக்க ஸ்வாமியே அதிகாரி" என்று சொல்லிச் சிலவிஷயங்களை விஜ்ஞாபித்தேன். அவற்றை இங்கு ஜ்ஞாபிக்கிறேன்.

பிள்ளான் (மதிராமிச்ரமான) என்று ஸாதிக்கவில்லை, (மதிரா பிந்து மிச்ரமான) என்று ஸாதித்திருக்கிறார்; தீர்த்த ஸலிலத்தை வெறும் பாத்ரஸ்தமாகப் பிள்ளான் ஸாதிக்கவில்லை, (சாதகும்பமயகும்பகத) என்று ஸுவர்ணபாத்ரஸ்தமென்று ஸாதித்திருக்கிறார். இதற்குச்சேர தேசிகன் எவ்விதமாகக் காரிகை யிட்டிருக்கவேணுமென்றால் "ஸமத்யபிந்து ஸௌவர்ண பாத்ர தீர்த்த நிதர்சநம்" என்று இட்டிருக்கவேணும். (மதிராமிச்ரமான) என்னாதே (மதிரா பிந்து மிச்ரமான) என்று ஸாதித்திருக்கையாலே உபாஸகன் ஸாத்விகத்யாகம் பண்ணினாலுங்கூட அஹங்காரலேசமாவது புகுந்தே தீருமென்று காட்டினபடி. அதற்காகவே பிந்து சப்தமிட்டருளினர் திருக்குருகைப் பிரான் பிள்ளான். "அஹங்காராந்வயேது ஸ்யாத் ப்ரபத்தாவபி பக்திவத்" என்கிற ஆபாதனம் யுக்தமா? என்பதை ஸ்வாமியே விமர்சித்தருளவேணும்.

"தேவதாந்தரங்கள் ரஜஸ்தமோ குணமிச்ரங்க
ளாகையாலே அநுபாஸ்யங்கள்"

என்று ஒருவர் சொன்னால் "ஸ்ரீமந்நாராயணனும் ரஜஸ்தமோ மிச்ரனானால் அநுபாஸ்யனே" என்று ப்ரதிபந்தி கொடுப்பாருண்டோ? "பரமஸத்வஸமாச்ரயன் நாராயணன்" என்பதறியாதாருடைய சோத்யமன்றோ அது. அன்றியும் நியாஸ திலகத்தில் "ஆர்த்தேஷ்வாசுபலா" என்கிற சுலோகத்தில் ஸ்வாமி தேசிகனே ப்ரபத்திக்கு ஐந்து (அல்லது) ஆறுவிசேஷணங்கள் இட்டருளியிருக்கிறார். ஒவ்வொரு விசேஷணமும் பரிகராலங்காரத்தின்படியே அமைந்துள்ளது. "யாவதாத்மநியத த்வத் பாரதந்த்ர்யோசிதா" என்கிற நான்காவது விசேஷணத்தை உற்று

நோக்கினால் ''ப்ரபத்தி ஸ்வரூபோசிதம்; பக்தியானது தத் ப்ரத்யநீகமாய் ஸ்வரூப விருத்தமானது'' என்னுமிடம் கையிலங்கு நெல்லிக்கனியாகவில்லையா? அந்த ச்லோகத்திலுள்ள ஒவ்வொரு விசேஷணமும் ப்ரபத்தியின் உத்கர்ஷத்தையும் பக்தியின் அபகர்ஷத்தையும் விளக்குவதற்கென்றே இடப்பட்டதென்பதை ஸ்வாமிகூட க்ரஹித்தருளவில்லையோ?......

இத்யாதிகள் விண்ணப்பம் செய்தேன். புன்முறுவலோடே உகந்து கேட்டருளி ''இப்போது என்மனம் குழம்பியிருப்பதால் மற்றொரு ஸமயம் சர்ச்சிப்போம்'' என்று ஸாதிக்க மந்த்ராக்ஷதை பெற்றுக்கொண்டு விடை கொண்டேன். அந்த ஸ்வாமியின் ஸுபோதிநீ வியாக்கியானம் அற்புதமாக அச்சிடப்பட்டுத் தேசமெல்லாம் திகழ நிற்கிறது. அதில் இரண்டாவது ஸம்புடத்தில் (பக்கம் 494ல் கடைசியிலிருந்து மூன்றாவது வரி காண்க.) அதாவது,

> ''சிலர் *மதிராபிந்து மிச்ரமான சாதகும்பமயகும்பகத தீர்த்த ஸலிலம் போலே அஹங்கார மிச்ரமான உபாயாந்தரம்* என்கிற பிள்ளான் வாக்யத்தைக்கொண்டு பக்தி அஹங்கார கர்ப்பமாகையால் ஸ்வரூப விருத்தமென்பர்கள், அது அநுபபந்நம்''

என்று ஸாதித்திருக்கிறார். அநுபபத்தியை விளக்கவில்லை, ''ப்ரபத்தாவபி பக்திவத்'' என்கிற மூலத்தை மட்டுமே தமிழாக்கம் செய்திருக்கிறார். அநுபபந்நம் என்று கண்டிக்கப்பட்ட அர்த்தம் பிள்ளானுடையதே யென்பதில் ஸந்தேஹமில்லையே. அநுபபந்நமாகவே யிருக்கட்டும். தேசிகன் திருவாக்கில் அநுபபன்னமென்று வந்தால் அது உபபன்னமா யிருக்க வழியேது? 'அநுபபன்னமன்று, உபபன்னந்தான்' என்று இங்கு நான் ஸமர்த்திக்க வரவில்லை, இங்கு விஷயமென்ன தெரியுமோ?

தேசிகன் பிள்ளானுடைய ஸ்ரீஸூக்தியொன்றையும் தழுவாததோடு
அதைக் கண்டித்திருப்பதுமுண்டு.

என்கிற நிரூபணமே. மீண்டும் கேளீர் தாதாசார்யஸ்வாமிந்! தெண்டனிட்டுக் கைகூப்பி விஜ்ஞாபிக்கிறேன். என்னை நோக்கியே தேவரீரெழுதிய பாரிஜாதத்தில் பக்கம் (102ல்) எழுதியிருக்கிறீர்—

> ''பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்த பல விஷயங்களை தேசிகன் அங்கீகரிக்காமல் வேறுவிதமாக யோஜித்தும் கண்டித்துமிருக்கிறார். ப்ரபத்திக்கு உபாயத்வமுண்டா இல்லையா? பிராட்டிக்கு புருஷகாரத்வம் தவிர உபாய கோஷ்டியில் ப்ரவேசமுண்டா இல்லையா? இத்யாதி விஷயங்கள் மிகமிக ப்ரதானமானவை. இவற்றில் பெரியவாச்சான்பிள்ளை அவலம்பித்த பக்ஷத்தை தேசிகன் மறுக்கிறார்.''

இவை தேவரீருடைய பங்க்திகள். இதில் ''ப்ரபத்திக்கு உபாயத்வமுண்டா இல்லையா?'' என்றது போலே ''பிராட்டிக்கு உபாயத்வமுண்டா இல்லையா?'' என்று விகல்பசரீர விந்யாஸம் பண்ணியிருக்கவேண்டும். எம்பெருமானுக்குப்

போலே பிராட்டிக்கும் உபாயத்வமுண்டென்பது உம்மைச் சேர்ந்தவர்களின் மதம். அந்தக் கொள்கையின்படி தோன்றின சுவடிகளையெல்லாம் நாம் சரமாரி மொழிந்து கண்டித் தொழித்தபடியாலே "பிராட்டிக்கு உபாயத்வமுண்டா இல்லை யா?" என்று விகல்பசரீரத்தை வைத்துக்காட்டவும் வெட்கப்பட்டு "உபாயகோஷ்டி யில் ப்ரவேசமுண்டா இல்லையா?" என்று ப்ரஸங்கிக்கிறீர். உபாயகோஷ்டியில் ப்ரவேசமில்லையென்று பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததாகவும், அதை தேசிகன் மறுத்து பிராட்டிக்கு உபாய கோஷ்டியில் ப்ரவேசமுண்டென்று ஸ்தாபித்து விட்ட தாகவும் எழுதியுள்ளீர். ஸம்ப்ரதாயத்தில் இது முக்கியமான விஷயமென்கிறீர். உபாயகோஷ்டியில் ப்ரவேசமென்ருல் என்ன அர்த்தமையா! என்று கேட்டிருக்கி றேன். இப்போதும் கேட்கிறேன். இந்த பரிச்சேதத்தின் தொடக்கத்தில் ப்ரதிஜ்ஞாதமான கேள்விகளில் இது தலையானதொன்று.

D. T. ஸ்வாமிந்! மேலே நாமெடுத்துக் காட்டிய உமது வாக்யராசியில் "ப்ரபத்திக்கு உபாயத்வமுண்டா இல்லையா?" என்று விந்யஸித்த தேவரீர் அவ் வண்ணமாகவே "பிராட்டிக்கு உபாயத்வமுண்டா இல்லையா?" என்றும் விந்ய ஸிக்கவேண்டியிருக்க, அங்ஙனம் விந்யஸிக்கமுடியாதபடி கையில் தேள்கொட்டின படியை நினைக்கும்போது ஒன்று நினைவுக்கு வருகின்றது. தேசிகன் சதுச்ச்லோகீ பாஷ்யத்தில் (3 ச்லோ.) "....மோக்ஷப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம் ....மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷுணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம் மதம்" என்றருளிச்செய்தபிறகு விலக்ஷணமான ஸ்ரீஸூக்தியொன்று—

"பரிபூர்ணுநுபவ ப்ரதாந ஸங்கல்பஸ்து பகவத: ஸ்வஸ்யைவ வா? ஸபத்நீகஸ்ய வா? இதி யதாப்ரமாணம் பவது" என்ருர். ப்ரமாணஸாகர பாரங்கதரான தேசிகர் ப்ரமாண பரிசீலநபூர்வகமாகவும் ஆசார்யோபதேசாநு ஸாரமாகவும் ஸித்தாந்தப் பொருளைத் தாம் விவரியாதே "யதாப்ரமாணம் பவது" என்றது ஏன்? பலனளிப்ப வன் பலப்ரதான ஸங்கல்பம் செய்யவேண்டியவன்; எவன் பலனளிப்பவனே அவன் ஸங்கல்பகர்த்தாவாவன். ப்ரக்ருதமான மோக்ஷப்ரதானத்தில் ஸங்கல்பக்ருத்யாதி காரியை விமர்சிக்கிற தேசிகன் "ஸங்கல்ப: பகவத: ஸ்வஸ்யைவவா? பத்ந்யா அபி வா? என்று விகல்ப சரீரத்தை வைத்திலர் என்பது முக்கியமாகக் குறிக்கொள்ளத் தக்கது. நியாயஸித்தாஞ்ஜனத்தில் *இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத் மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே* என்கிற ஸ்வாமியின் காரிகையானது ப்ரபத்தி யின் உபாயத்வத்தைமட்டும் தவிர்ப்பதன்று; பிராட்டியின் உபாயத்வத்தைத்தான் முந்துறமுன்னம் தவிர்ப்பது. பிராட்டிக்கும் உபாயத்வமுண்டென்று திருவுள்ளத்தி லோடியிருந்தால் *இயம் லக்ஷ்மீததீசாநோபாயத்வ ப்ரத்யயாத்மிகா* என்றன்றோ வசனவ்யக்தி வெளிவந்திருக்கும். இச்சிறு விஷயத்தையும் க்ரஹிக்கமாட்டீரா?

இங்கு முக்கிய விஷயம் எதுவென்ருல் "....ஸங்கல்ப: பகவத: ஸ்வஸ்யைவ வா ஸபத்நீகஸ்யவா" என்று விகல்ப சரீரமிட்டருளின தேசிகனுக்கு "ஸங்கல்ப: ஸ்வஸ்யைவ வா, பத்ந்யா அபி வா" என்றிடுவதற்கு முடியாமற்போனதுபோலவே உமக்கும் "பிராட்டிக்கு உபாயத்வமுண்டா இல்லையா?", என்று ப்ரஸங்கிக்கக்கூட முடியாதபடி செய்து நமது நூல்கள் வெற்றிபெற்றிருக்கின்றனவென்பதே காணும்.

ப்ரக்ருத விஷயத்தை நிகமிக்கிறேன். தேசிகன் கண்டிப்பது திருக்குருகைப் பிரான் பிள்ளானுடைய திவ்ய ஸ்ரீஸூக்தியையேயொழிய, பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியை ஓரிடத்திலும் கண்டித்தவரல்லர் என்பது சிலாலிகிதம். பிள்ளான் ஸ்ரீஸூக்தியைக் கண்டித்தது ஸ்ரீமதிஞ்சிமேட்டழகிய சிங்கர் ஸ்ரீஸூக்தி ஸாக்ஷிகமாகக் காட்டப்பட்டதுகீழ். பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளை தேசிகன் வேதவாக்காகக்கொண்டவரென்பது ஏற்கனவே அசைக்கமுடியாதபடி மூதலிக்கப் பட்டுள்ளது. அதில் ஒரே கேள்விகேட்டு இந்த பரிச்சேதத்தை நிகமிக்கிறேன்.

தேசிகன் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்னவளியிலும் ஸாரத்திலும் தசக—சதகப்ரமேயங்களைப் பணிக்கு மிடங்கள்தோறும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தின்படியையே கொண்டு ஸாதித்திருக்கிறரென்றும், பிள்ளானுடைய படியை ஓரிடத்திலும் தழுவவில்லையென்றும் நான் மூதலித்திருந்ததை மறுக்கப் புகுந்த தேவரீர் ஆறாயிரப்படியில் இல்லாத பல வாக்கியங்களைப் புக்குத்தின் வஞ்சகளடிஷனைக் கண்டு ஏமாந்து ஆறாயிரப்படியைத்தான் தேசிகன் தழுவியிருக்கிறரென்று சூதாக உமது பாரிஜாதத்தில் எழுதியிருந்தீர். அதையெல்லாம் ஸ்ரீ ராமாநுஜன் 2ó2ல் நீறுபாருக்கியிருக்கிறேனல்லவா? அவற்றில் ஒன்றுக்காவது வஞ்சகமற்ற விடையுண்டா? உண்டாகில் செவ்வனே நிரூபித்து என்னை அடிமை கொள்வீரா ?

ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வாமியை தேவரீர் ரக்ஷிப்பதற்கு அனேக விஷயங்கள் காட்டவேண்டியிருந்தும் ஒரே விஷயமே காட்டி நின்றேன். இப்போது தேவரீரைப்பற்றி ஒரே வியஷங்காட்டி நிற்கிறேன். இதில் தேவரீரை தேவரீரே ரக்ஷித்துக் கொள்வதோ, மதுராந்தகம் ஸ்வாமியால் ரக்ஷைபெறுவதோ எப்படியானாலும் ஸந்தோஷம். விஷயம் முக்கியம். தேசிகன் பிள்ளானுடைய ஆறாயிரப் படியைக் கண்டவரே யல்லர். உபதேச ரத்தினமாலையில் "தெள்ளாரும் ஞானத் திருக்குருகைப் பிரான் பிள்ளான்...இன்பமிகுமாறாயிரம்" என்கிற பாசுரம் திருவவதரிப்பதற்கு முன்பு ஆறாயிரப்படி யொன்று தோன்றியிருப்பது ப்ரஸித்தமாக இருந்ததில்லை தேசிகன் தாம் குருமுகமாகக் கேட்டதும் தாம் ப்ரவசனம் செய்ததும் பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படியையே. பதவுரை தெரிந்து கொள்வதற்கு வாதி கேஸரியின் பன்னீராயிரப்படியைத் துணைகொண்டதுண்டு. தாத்பர்யரத்னவளீ ஸாரங்களில். அதிகமாக உபயோகங்கொண்டது இருபத்து நாலாயிரப்படியையே என்பதைப் பரக்க உபபாதித்து திருவாய்மொழி முதற்பத்தில் 8, 9, 10 ஆகிய மூன்று பதிகங்களை முக்கியமாக எடுத்துக் காட்டி, இவற்றுக்குப் பிள்ளானருளிய ப்ரமேயம் வேறு என்பதையும், நம்பிள்ளை திருவடிகளருளிய ப்ரமேயம் வேறு என்பதையும் அந்தந்த ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டே விளக்கிக் காட்டி தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை திருவாக்கையே தஞ்சமாகக் கொண்டிருக்கிறரென்பதையும் கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொப்ப விளக்கியிருக்கிறேன். அப்படியிருக்க, பாரிஜாதச் சுவடியில் பக்கம் 63ல் கடைசியில் 55 என்று லக்கமிட்டு முதலில் என்னுடைய நிரூபணத்தை அநுவதித்து உடனே தன்னியல்வின்படி நிந்தைக் கந்தைகளை வளர்த்தியிருக்கிறீர். நிந்தைகளைப் பற்றி நமக்கென்ன ? உம்முடைய பங்க்திகளை அப்படியே அநுவதிக்கிறேன் இதோ;

"55 இங்கு திருவாய்மொழி (1-9) *இவையுமவையும் பதிகத்தில் எம்பெருமான் ஆழ்வார்க்கு ஸ்வாநுபவத்தை ஸாத்மிக்க ஸாத்மிக்கக் கொடுத்தருளினதாக ஆறுயிரப்படியிலன்றிக்கே) பெரியவாச்சான்பிள்ளை அவதாரிகை இட்டருளினர், அதை யநுஸரித்து தேசிகன் *ஸாத்ம்ய போகப்ரதாநாத்* என்றருளிச் செய்தார்'—என்றது அஜ்ஞானத்தினலா? வெறும் வஞ்சனையைக் கருதியா? என்பது விளங்கவில்லை. (இங்கே ஆறுயிரப்படியிலுள்ள அவதாரிகை யாவது–) "ஆர்ஜவகுணநுஸந்தானம் பண்ணின தம்மிடத்தில் ஈச்வரன் ஸாத்மிக்க ஸாத்மிக்க ஸர்வாவயவஸம்ச்லேஷம் பண்ணின அநுபவரஸத்தையருளிச் செய்கிறார்" என்பது (என்றெழுதிவிட்டு, இதற்குமேலும் எழுதியதாவது— "தேசிகன் ஸ்ரீபாஷ்யவிரோதம்மலிந்ததாய் தாம் பரிஷ்கரிக்க வேண்டியதாயிருந்த ஒரு நூலை [அதாவது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை] காலக்ஷேப க்ரந்தமாகக் கொண்டாரென்பது சிறிது ப்ரஜ்ஞையுள்ளவன் சொல்லக்கூடிய வார்த்தை யன்று." என்பதாக. தேவரீருடைய ஆயிரம் வஞ்சனைகளில் ஈதொன்று இங்குக்காட்டியது போதும்.

நான் உலகத்தை வஞ்சித்து வருவதாக அடிக்கடி யெழுதி வருகிறீர். உம்முடைய வஞ்சனையை இங்குக் கண்ணுடிபோல் காட்டி மூதலிக்கிறேன். மேலே நானெடுத்துக் காட்டிய உம்முடைய வாக்கிய ராசியில் *இவையுமவையும் பதிகத்திற்கு ஆறுயிரப்படி யவதாரிகையென்று நீர் எடுத்தெழுதியிருப்பதாவது "ஆர்ஜவ குணநுஸந்தானம் பண்ணின தம்மிடத்தில் ஈச்வரன் ஸாத்மிக்க ஸாத்மிக்க ஸர்வாவயவ ஸம்ச்லேஷம் பண்ணின அநுபவரஸத்தை யருளிச்செய்கிறார்." என்பதாகவன்றே? வஸ்துஸ்திதியில் இப்படியொரு அவதாரிகை பிள்ளான் அருளிச்செய்திருந்தால்–அருளிச் செய்திருப்பதாக தேவரீர் ஸபையில் காட்டிவிட்டால்

இந்த விவாத விஷயமாக மட்டுமன்றிக்கே மற்றும் பல பலவிவாதங்கள் விஷயமாகவும் லோகாபிராமமாகவும் ஸம்ஸ்க்ருதத்ராவிட நாநா க்ரந்த வ்யாக்க்யான ரூபமாகவும் இதுகாறும் நானெழுதி யச்சிட்டு வெளியிட்டிருக்கிற ஆயிர நூல்களையும் மயிலையில் வந்து பல மஹான்களின் முன்னிலையில் கிழித்தெறிந்துவிட்டு அவ்விடத்திலேயே தொண்டர் தொண்டர் தொண்டனுயிருந்து ஆயுச்சேஷத்தைக்கழிக்கக்கடவேன். P.B.A.

[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥

ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியர் எழுதிய

ஸுதர்சன ஸந்தர்சனத்தில் மூன்றாவது பரிச்சேதம்

முற்றிற்று.

ஸ்ரீ:

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் ஸங்கல்பித்திருக்கிற

# ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண ஸஹஸ்ர குண்ட ஹோம க்ரது திருமலைமேலே

1—3—1972 முதல் 12—3—1972 வரையிலும் ஸ்ரீமன் நாராயண ராமானுஜ ஜீயர் ஸ்வாமி மங்களாசாஸனத்துடன் ஸகல அரிஷ்டங்களுடையவும் நிவாரணத்திற்கும் லோக கல்யாண நிமித்தமாகவும் பகவத் பாகவத ஆசாரிய கைங்கர்ய ரூபேண நடைபெற நிச்சயிக்கப்பட்டது. பக்தர்களான தாங்கள் எல்லோரும் அவசியம் எழுந்தருளி இந்த லோக கல்யாண காரணமான க்ரதுவை நடத்திக்கொடுக்க வேணுமென்று கோருகிறோம். இதில்:—

1. 1008 ருத்விக்குகளாலே 2 கோடி அஷ்டாக்ஷர மகாமந்திர ஜெபம்.
2. 1008 ருத்விக்குகளாலே 2 கோடி ஸ்ரீமந்த்ர ஜெபம்.
3. 1008 ஹோமகுண்டங்களில் ஹவனம்.
4. 30,00,000 தர்ப்பணம்.
5. ஒரு கோடி துளசி, குங்குமம், புஷ்ப அர்ச்சனை.
6. 400 வைதிகர்களாலே வேதபாராயணம்
7. 400 அத்யாபகர்களாலே திவ்யப்ரபந்த ஸேவை.
8. 108 பண்டிதர்களாலே ஸ்ரீ பாகவத பாராயணம்.
9. 108 பண்டிதர்களாலே ஸ்ரீ பாஷ்ய பகவத்விஷய பாராயணம்.
10. 108 பண்டிதர்களாலே அஷ்டாதச புராணங்களின் படனம்.
11. 108 பண்டிதர்களாலே ஸ்ரீ ராமாயண—பாரதங்கள்.
12. 108 பண்டிதர்களாலே ஸ்ரீ வேங்கடேசுவர மாகாத்மிய பாராயணம்.
13. 108 பண்டிதர்களாலே ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்.
14. 108 பண்டிதர்களாலே பிரம்ம காயத்ரீ ஜெபம்.
15. 108 பண்டிதர்களாலே ஸ்ரீபகவத்கீதா பாராயணம்.
16. 108 பண்டிதர்களாலே ஹரே ராம அகண்டநாம ஸங்கீர்த்தனம் (பஜனை)

இந்தவிதமாக ஜெப—பாராயணங்களுடன் இன்னும் பலவிதமான காரியங்களுடனும் இந்த யஜ்ஞம் நடைபெறும். இது ஒரு அபூர்வமான, பரம ஸாத்விக, பரம வைதிக, உத்தமோத்தமமான விலக்ஷண யஜ்ஞ விசேஷம். இந்த யுகத்தில் இந்த யஜ்ஞமே முதல் பிரயத்தனம் என்று சொல்லுவார்கள். பக்தர்கள் எல்லாரும் தனு, மன, தனங்களோடு இந்த காரியக்ரமத்தில் அன்வயிக்க வேணுமென்று கோருகிறோம்.

ஸ்ரீ:—

## கைங்கர்ய விபரங்கள் :

1. ஒரு தினம் ஒரு ஹோமகுண்டத்திற்கு நிர்வஹண யாஜமான்யமாக ஏற்க ரூ. 116 யாக தக்ஷிணைகளுக்காகவும்; 116 கிலோ அரிசி அன்ன சாந்திக்காகவும்; 16 கிலோ உள்ள ஒரு டின் நெய் சமர்ப்பிக்கவேணும். இல்லாத போனல் இந்த மூன்றுக்கும் பதிலாக ரொக்கம் ரூ. 451 சமர்ப்பிக்கலாம். இதற்கு ஒரு "யூனிட் சந்தா" எனப்பெயர்.

இந்த யூனிட் சந்தாவை மொத்தமாக ஒரு வியக்தியோ அல்லது சிலபேர்கள் சேர்ந்தாவது, அல்லது ஒரு கிராமத்திலிருக்கிற எல்லோரும் கூட்டாகவாவது அல்லது ஒரு பேட்டையிலிருக்கிறவர்கள் கலந்தாவது சமர்ப்பிக்கலாம்.

ஒவ்வொருவரும் ரூ. 1 தக்ஷிணை, 1 கிலோ அரிசி, ⅛ கிலோ நெய் அல்லது இந்த மூன்றுக்கும் பதிலாக ரூ. 4. இப்படி 116 பேர் கலந்தாவது ஒரு யூனிட் சந்தா சமர்ப்பிக்கலாம்.

ஒரு யூனிட் சந்தாவுக்கு ஒரு தம்பதி மாத்திரம் ஒருநாள் மாத்திரம் ஒரு ஹோமகுண்ட நிர்வாஹ யஜமானராக இருக்கக்கூடும். இப்படி எத்தனை நாட்களுக்காவது எத்தனை ஹோமகுண்டங்களுக்காவது அத்தனை யூனிட் சந்தாக்களை சமர்ப்பித்து அத்தனை ஹோமகுண்டங்களுக்கு நிர்வாக யஜமானராக இருக்கலாம். ஹோமகுண்ட யஜமானர்கள் எல்லோரும் அவரவருடைய கோத்திர நாமங்களாலே ஸங்கல்பம் சொல்லி பூஜை நடத்திவைக்கப்படும்.

2. ஹோமகுண்ட யாஜமானியம் இல்லாமல் ஏதோ ஒரு தினத்தில் மாத்திரம் ஒரு தடவை, விரதம் அர்ச்சனை மாத்திரம் பண்ண விருப்பமுள்ளவர்கள் முதல் வகைக்கு ரூ. 116-ம், இரண்டாம் வகைக்கு ரூ. 58-ம், மூன்றும் வகைக்கு ரூ. 29-ம் சமர்ப்பிக்கலாம்.

3. யார் பக்தி ச்ரத்தையோடு குறைவாகவோ அதிகமாகவோ எத்தனை சமர்ப்பித்தாலும் அதை ஸ்வீகரித்து யஜ்ஞக்ரதுவுக்கு உபயோகப்படுத்தப்படும். பக்தி ச்ரத்தைதான் பிரதானம்,

ப்ரிய மகான்களே! ஒவ்வொரு பக்தரும் ஒரு நல்ல சுபதினத்தில் அவரவர் அகங்களிலே பகவத் தியானம் செய்து "ஸர்வாரிஷ்ட சாந்திரஸ்து, ஸர்வே ஜனா: ஸுகினோ பவந்து" என்று ஸங்கல்பம் பண்ணி ஒரு மிகச்சிறிய புதுத்துண்டை மஞ்சள் நீரில் நனைத்து, அதில் ஒரு நயா பைசாவுக்குக் குறையாமல் பிரார்த்தனையுடன் முடிபோட்டு எங்களுக்கு அனுப்பிவைக்கப் பிரார்த்திக்கிறோம். அவைகளை எல்லாம் இந்த யஜ்ஞத்தில் சேர்க்க ஏற்பாடு செய்கிறோம். உங்களுக்கு ஸர்வாபீஷ்டங்களும் ஸித்திக்கவேணுமென்று ஸ்ரீயப்பதியை பிரார்த்திக்கிறோம்.

4. சந்தா கொடுத்தவர்கள் எல்லோரும் அவசியம் அச்சு ரசீது பெறவேண்டும்.

சுபமஸ்து.

**ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண ஸஹஸ்ர குண்ட க்ரது காரியாலயம்,**
**திருமலை சித்தூர் ஜில்லா, ஆந்திர பிரதேசம்.**

# ஆஸ்திகர்களுக்கு அறிவிப்பு

ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீமந்நாராயணராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகளின் மனோரத ப்ரவாஹங்கள் கரைகட்டாக் காவேரிபோலே எம்பெருமானுடைய உலகளந்த திருவடி செல்லமாட்டாத விடங்களிலும் செல்லுமவை. நாற்றிசைகளிலும் க்ரதுஸ்தம்ப ப்ரதிஷ்டாபனம் செய்தருளின செயல் அதிமாநுஷமாகத் தோன்றிற்று. திருவேங்கடமலைமேல் செய்தருளின அஷ்டோத்தரசத ஹோமகுண்டஹவனம், ஸ்ரீபதரிகாச்ரமத்தில் செய்தருளினவை அதிமானுஷ மென்பதற்குமேல் அதிதைவம் என்னலாயிருந்தன. இப்போது ஸங்கல்பித்திருக்கிற ஸ்ரீலக்ஷ்மீநாராயண ஸஹஸ்ர ஹோமகுண்ட மஹாக்ரதுவைப்பற்றின விளக்கங்களை மேலே கண்டீர்களல்லவா? அவாங்மநஸகோசரம் என்றொரு வடசொல் உண்டு; அதற்கு ஒரு விஷயமிருக்கவேணுமானால் இதுதான் விஷயம். இதை நடத்தித் தலைக்கட்டுவதென்பது இருக்கட்டும். நெஞ்சால் ஸங்கல்பிக்கவாவது ஒருவரால் இயலுமா? என்பதை ஒவ்வொருவரும் ஆலோசிக்கவேணும்.

இந்த உத்தேசியம் நிறைவேறுவதற்கு இருபது லக்ஷம் ரூபா செலவாகு மென்று மதிப்பிடப்படுகிறது. ஜீயர் ஸ்வாமியின் அநுபவம் எனக்கு இருபத்தைந்து வருஷங்களுக்கு மேலாகவுண்டு. பணம் திரட்டுவதைப்பற்றின கவலை ஸ்ரீஸ்வாமியின் திருவுள்ளத்தில் எள்ளளவும் நடையாடுவதில்லை. “அஹமஹமிகாம் தந்வதே ஸம்பதோகா:” என்றது ப்ரத்யக்ஷமாகவுள்ளது. 1972ஆ மார்ச்சுமாதம் என்பது நெடுந்தூரத்திலில்லை. இங்கு ப்ரசுரிக்கப்பட்டுள்ள பத்ரிகையை ஊன்றி வாசித்தால் அதுவே ஒரு க்ருதுவாகும். திருவேங்கடமுடையானை உலப்பில் கீர்த்தியம்மானென்று ஆழ்வார் என்றைக்கோ பாடினார். அது நம் ஜீயர் ஸ்வாமியால் ஸுப்ரதிஷ்டிதமாகிறது. ... ... ... .... ... ●

---

# பெரியாரின் மறைவு

ஸ்ரீகாஞ்சீபுரியில் பரிகணநீயர்களில் ஒருவராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. குன்றபாக்கம் திருமலை அனந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி ஆவணிமீ அமாவாஸ்யையன்று அநாயாஸமாகத் திருநாடலங்கரித்தார். ஸ்ரீசைலம் க்ருஷ்ணமாசாரியரென்று ப்ரஸித்தரானவிவரை யறியாத ஸ்ரீவைஷ்ணவர்களில்லை. காவ்ய நாடகாலங்காரங்களில் நிஷ்ணாதராய் அருளிச்செயலில் வல்லவராய் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளையெல்லாம் அதிகரித்துப் பரமரஸிகரா யெழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமியின் பிரிவு அதிமாத்ர சோசநீயம். பிராயம் எழுபது. ... *

# கண்ணனும் அண்ணனும் பேசியவை

(முன்னிதழ்த் தொடர்ச்சி—3)

கண்ண—(கனவேகமாக ஓடிவந்து) நேற்று என்னுடைய ஜயந்திமஹோத்ஸவமாச்சே, * கன்னலிலட்டுவத்தோடு சீடைகாரெள்ளினுண்டை கலத்திலிட்டுக் கொடுப்பாயென்று ஓடிவருகிறேன் அண்ண! கொடு கொடு (என்கிருன்.)

அண்ண—எவ்வளவு தந்தாலும் * இன்னமுகப்பன்நானென்று சொல்லியெல்லாம் விழுங்கிட்டுப் போருமவனல்லவா நீ; * பின்னுமகம்புக்குறியை நோக்கிப் பிறங்கொளிவெண்ணெயும் சோதிக்கின்றவனல்லவா? நீ; * அட்டுக் குவிசோற்றுப் பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறுமடங்கப் பொட்டத்துற்றியவுனக்கு நானென்ன கொடுக்க வல்லேன் கண்ண!, இரு, நீ வேண்டியதெல்லாம் தருவன். யசோதைப் பிராட்டியே * கேசவா! கோவலரிந்திரற்கும் காட்டிய சோறுங் கறியுந் தயிருங்கலந்துடனுண்டவுனக்கு ஊட்டமுதலிலேன் என்றுளே, என்னிடம் என்னவுள்ளது கண்ண! ஆயினும் * 'அண்வபி உபஹ்ருதம் ப்ரேம்ண பூர்யேவ மே பவேத்' * என்கிறவுனக்கு இடத்தடையில்லை என் கேள்விகளுக் கெல்லாம் நீ பதில்சொல்லியான பிறகு நீ வேண்டியதெல்லாம் தருகிறேன். இப்போது நான் கேட்பது கேளாய். முன்பு நீ என்னைவிட்டுப் பிரிந்து போம்போது "*தேடித் திருமாமகள் மண்மகள் நிற்ப * என்று திருமங்கையாழ்வார் ஸாதித்தபடி திருமாமகளும் மண்மகளும் என்னைத் தேடிக்கொண்டு திரிகிருர்களாம். போய்வருகிறேன்" என்று சொல்லிவிட்டுப்போனுயே, நினைவிருக்கிறதா?

கண்ண—ஏன் நினைவில்லை? நன்ருக நினைவிருக்கிறது. அவர்களோடு கலந்து பரிமாறிவிட்டுத்தானே இதோ வருகிறேன். இதில் என்ன கேட்க விரும்புகிருய் நீ?

அண்ண—ஸ்ரீதேவீ, பூதேவீ, நீளாதேவீ என்று ப்ரதாநமஹிஷிகள் மூவரென்று ப்ரஸித்தமாயிருக்க, திருமாமகளும் மண்மகளுமே தேடி நிற்பதாகச் சொல்லியிருப்பது எங்ஙனம்? இது எனக்கு நெடுநாளாக வுண்டான ஸந்தேஹம். பலரையும் கேட்டுப்பார்த்தேன். ஒருவரும் த்ருப்திகரமாகச் சொல்லாமையாலே உன்னையே கேட்கிறேன். சொல்லாய் திருமார்பா!

கண்ண—இதை நான் ஜிஜ்ஞாஸாப்ரச்நமாக நினைக்கவில்லை. உண்மையில் உனக்குத் தெரியாமலா கேட்கிருய்? எப்படியாவது இருக்கட்டும்; நான் சொல்லுகிறேன். ஸ்ரீபூமி நீளா தேவிகளைச் சேர்த்துச் சொல்லுகிற ஆழ்வார்கள் நீளாதேவியை எங்ஙனம் குறிப்பிட்டிருக்கிருர்களென்பது தெரியுமா? ஆழ்வாரருளிச் செயல்களில் ஆழ்ந்தவனென்கிருயே! சொல்லுபார்ப்போம்.

அண்ண—என்னையொன்றுங் கேளாதே நீயே சொல்லு கண்ண! நீ ஸர்வஜ்ஞன், நான் அஜ்ஞன்; மிதஜ்ஞன். அல்பஜ்ஞன். நீ சோதிவாய்திறந்து சொல்வதையன்றோ நான் கேட்க விரும்பியிருக்கிறேன்.

கண்ண—சொல்லுகிறேன் கேள் அண்ண! ஆழ்வார்களுள் முதல்வர் பொய்கையார். அவருடைய பாசுரம்—* திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால் * என்பது நம்மாழ்வார் முதல்வரல்லாவிடினும் தலைவர்; அவர் திருவாய்மொழியில் ஸாதிப்பது தெரியுமா? *உடனமர் காதல்மகளிர் திருமகள் மண்மகளாயர் மடமகள் என்றிவர் மூவர் * என்கிருர். இவர்கள் ஆய்மகளென்றும், ஆயர் மடமகள் என்றும் சொல்லியிருப்பது எந்தத்தேவியாரை? என்பது தெரியுமா உனக்கு?

அண்ணு—முதற்பிரபந்தமான திருவிருத்தத்தை விட்டு சரமப்பிரபந்தமான திருவாய்மொழிக்கு ஏன் போகிருய் கண்ணு! திருவிருத்தம் மூன்ருவது பாட்டின் தொடக்கம்—*குழற் கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும் நிழல்போல் வனர்* என்றன்ருேவுள்ளது. இப்பாசுரத்தையே யெடுக்கலாமே.

கண்ணு—இப்பாசுரத்தை நீ யெடுத்துக் காட்டுகிருயா இல்லையா? என்று பரீக்ஷிப்பதற்காகவே நான் விட்டிட்டேன். இருக்கட்டும். இவ்விடங்களிலெல்லாம் ஸ்ரீ தேவியையும் பூதேவியையும் நீளா தேவியையும் குறிப்பிடுகிருர்களென்பது தெரிந்ததுதானே ஓரிடத்திலாவது நீளா என்கிற பெயர் காண்பதுண்டா? உண்டானல் ஓரிடமாவது எடுத்துக்காட்டுபார்ப்போம்.

அண்ணு—இல்லாததை நான் எப்படி யெடுத்துக்காட்ட முடியும் கண்ணு? நம்மாழ்வார் "கூந்தல் மலர் மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர் கொழுந்துக்குங் கேள்வன் தன்னை" என்ருப்போலே பேசியிருக்குமிடங்கள் பலவுண்டு; மலர் மங்கையென்ருல் ஸ்ரீ தேவி; மண்மடந்தையென்ருல் பூமிதேவி. இவ்விரண்டும் தெரிந்ததே. உடனே *குலவாயர்கொழுந்து* எனப்படுகிற வ்யக்தி யார்? திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷங் குடிப்பெண்கள் என்கிருர்கள் ஆசாரியர்கள். குலவாயர் கொழுந்தாக அபிமானிக்கப்படுகிற வ்யக்தி இன்னுளென்று ஓரிடத்திலும் தெரிவிக்கவில்லையே.

கண்ணு—ஓரிடத்திலும் தெரிவிக்கவில்லையேயென்று நீ சொல்லலாமா? நன்ருக ஆலோசித்துப்பார். *கூந்தல் மலர்மங்கைக்குமென்று நீ யெடுத்த பாசுரம் திருவாய்மொழி ஐந்தாம் பத்திலுள்ளது; அடுத்த ஆரும்பத்தில் அதற்கு வியாக்கியானமிருக்கிறதே, அது நினைவுக்கு வரவில்லையா?

அண்ணு—'ஆரும்பத்தில்' என்று நீ சொன்னவுடனே எனக்கு நினைவுக்கு வந்துவிட்டது கண்ணு! அதில் தோழி பாசுரமான *துலைவில்லி மங்கலப்பதிகத்தில் நம்மாழ்வாரை ஸ்ரீதேவியோ! பூதேவியோ! நீளாதேவியோ! என்று விதர்க்கித்துச் சொல்லுகிற தோழியானவள் "பின்னைகொல்! நிலமா மகள் கொல்! திருமகள் கொல்!" என்று கூறியிருக்கிருள். ஸ்ரீ பூ நீளா தேவிகள் என்கிற அடைவை மாற்றி நீளா பூமி ஸ்ரீ தேவிகள் என்று அமைத்திருப்பது தெரிகிறது. நீளா தேவியைக் குறிக்கவேண்டுமிடத்தில் பின்னைகொல் என்றிருப்பதனல் பின்னை யென்கிற ஆய்ச்சியும் (அதாவது, நப்பின்னைப்பிராட்டியும்) நீளா தேவியும் ஒரே வ்யக்தியென்று அறியக் கிடக்கிறது. இவள்தான் நீளை யென்று ஓரிடத்திலும் காட்டவில்லையே.

கண்ணு—குறிக்கொண்டிது நீ கேள்; ஸ்ரீ தேவி பூதேவிகளையெடுக்குமிடங்களில் (நீளையின் ஸ்தானத்திலே) ஆய்மகளென்றே எடுக்கையாலே ஸமபிவ்யாஹாரபலமென்கிற நீதியைக் கொண்டு அவள் தான் நீளை யென்றும், நீளையைத் தான் ஆய்மகளென்று குறிக்கிருர்களென்றும் உன்ஞல் தெரிந்து கொள்ளமுடியவில்லையா?

8

அண்ணு—இது லகுவாகத் தெரிந்து கொள்ளக்கூடிய விஷயமாகத் தோன்ற வில்லை கண்ணு! ஆராய்ச்சியினுல் தெரிந்து கொண்டிருக்கிறேன். என்னுடைய பல ஆராய்ச்சிகளில் இது தலையானதென்றும் சொல்லலாம்.

கண்ணு—இவ்விஷயத்தில் நீ ஆராய்ச்சி செய்தவிதத்தைக் கொஞ்சம் சொல்லு கேட்போம்.

அண்ணு—தாராளமாகச் சொல்லுகிறேன் கேளாய் கண்ணபிரானே! உனக்கு அமைந்துள்ள ஸ்துதிகளில் "ருக்மிணீ ஸத்யபாமாப்யாம் நித்யயுக்தாய மங்களம்" என்றிப்படிப்பட்ட துதிகளே அநுஸந்தானத்தில் வந்துள்ளன. அர்ச்சாவதாரங்களில் ருக்மிணிப் பிராட்டியே ப்ரதான மஹிஷியாகக் குலாவப்படு கிருள். ஸ்ரீ பராசரமஹர்ஷியும் ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் "ராகவத்வே அபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி" என்ருர். ஆயர்மடமகளென்னப்படுகிற நப்பின்னைக்கு வடமொழிப்பெயரென்ன? என்று ஆராய்ந்தேன். திருப்பாவைக்குத் தனியனிட்டருளின பட்டர் ,'நப்பின்னை கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர் மார்பா!" என்ற பாசுரத்தையே நோக்கி "நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தம்" என்றருளிச் செய்திருப்பதனுல் நப்பின்னையின் வடமொழிப் பெயர் நீளா என்பது என்று துணிந்தேன்.

கண்ணு—பட்டர் எந்த ஆதாரத்தைக் கொண்டு நீளா என்று திருநாம மிட்டார்? என்பதை ஆராய்ந்தாயா? அதையும் சொல்லு.

அண்ணு—அதையும் ஆராய்ந்தே யிருக்கிறேன். அவருடைய திருத் தகப்பனுரான கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹு ஸ்தவத்தில் க்ருஷ்ணுவதாராநு பவம் பண்ணத் தொடங்குகையில் *ஹே ஸுந்தரைகதரஜந்மநி* என்ற சுலோகத் தினுல் உன்னை நோக்கி ஒரு கேள்வி கேட்க விரும்பிக் கேள்வியைத் திருவுள்ளத் திலே வைத்து ஸமாதானத்தைமட்டும் வெளியிட்டார். (அதாவது) கண்ணு! இந்த அவதாரத்தில் ஒரே பிறப்பில் ஒரே க்ஷணத்தில் இரண்டு தாயரையும் இரண்டு தந்தைகளையும் (யதுகுல கோபகுலங்களாகிற) இரண்டு குலங்களையும் அநுக்ரஹித்த நீ ஆய்க்குலத்திற்குத் தகுதியாக நப்பின்னையையும், யதுகுலத் திற்குத் தகுதியாக ருக்மிணியையும் பலமாகக் கொண்டாய் என்னும்போது "நீளா குலேந ஸத்ருசீ கில ருக்மிணீச" என்ருர். அதனுலும் நப்பின்னைக்கு நீளா என்பது வடமொழி நாமமென்று அறுதியிட்டேன்.

கண்ணு—பசியாயிருக்கிறது, பக்ஷணங்கள் கொடு; புஜித்துவிட்டுப் பிறகு பேசுகிறேன். (என்று சொல்லி பக்ஷணங்களை வாங்கி யமுது செய்கிருன்.)

பசி தீர்ந்த பிறகு மேல் ஸம்பாஷணை நடக்கும்.

# வேதவிசாரப்பகுதி - ஸ்வரபேதக்கண்ணாடி

(தொடர்ந்து வருவது.)

தைத்திரீய ஸம்ஹிதையில்—ஓரெழுத்துப்பத மொன்று, ஈரெழுத்துப்பத மொன்று, மூவெழுத்துப் பதமொன்று, நாலெழுத்துப் பதமொன்று, ஐயெழுத்துப் பதமொன்று, ஆறெழுத்துப் பதமொன்று—ஆகிய ஆறு பதங்களை யெடுத்துக் கொண்டு இவற்றிலுள்ள ஸ்வரபேதத்தையும் அதன் நிமித்தத்தையும் நிரூபிக்கிறேன்.

ஓரெழுத்துப்பதம்=(கவர்க்க த்ருதீயாக்ஷரம்) காம்-(ஶாஂ-ஶா:) *தௌ ததோ ஶாஂ ஸமைரயதாம்* என்ற விடத்தில் (ஶாம்) என்னும் பதம் உதாத்தம். *சிவோ மே ஸப்தர்ஷீந் உபதிஷ்டஸ்வ மா மே வாங் நாபிமதி ஶா:* என்ற விடத்தில் (ஶா:) என்னும்பதம் அநுதாத்தம். முந்தினவிடத்தில் ஶோசப்தம் த்விதீயாந்தம். *ஶௌர் வாவ ஸர்வஸ்ய மித்ரமிதி* இத்யாதிகள் காண்க. பிந்தினவிடத்தில் (ஶா:) என்கிற பதம் திஙந்தம். * இஞோ ஶால்லுங்கி * என்கிற ஸூத்ரத்தினால் இண் தாது வின் லுங்ரூபம் அஶாத். அதில் மத்யமபுருஷ ரூபம் அஶா: என்று. முன்னே மாங் இருப்பதால் அட்டுக்கு லோபம் வந்து (ஶா:) என்றிருக்கிறது. ஆகவே இதற்கு ஔத்ஸர்க்கிகமான அநுதாத்தமுள்ளது. (அத்யந்யாநஶாம் நாந்யாநுபாஶாம்) என்பதை ஸ்மரிப்பது.

ஈரெழுத்துப் பதம. (புர:) என்கிற பதம் *அயம்புரோ புவஸ்தஸ்ய ப்ராண:* இத்யாதி ஸ்தலங்களில் புரஸ்தாத்பர்யாயமான அவ்யயமாகையாலே அந்தோ தாத்தம் *தேஷாமஸுராணாம் திஸ்ர: புர ஆஸந்* இங்கு பூ: புரௌ புர:= பட்டணங்களென்று பொருளாகையாலே ஆத்யுதாத்தம்.

## மூவெழுத்துப் பதம்

இந்த்ராக்நீ.=இதற்கு மூன்று விதமான ஸ்வரம் (1) ஆத்யுதாத்தம். (2) அந்தோ தாத்தம். (3) ஸர்வாநுதாத்தம். *இந்த்ராக்நீ ரோசநா திவ:* இத்யாதி ஸ்தலங்களில் ஸம்புத்தியாகையாலே ஸர்வாநுதாத்தமாயிருக்கவேணும். ஆதியில் வந்த படியாலே அதற்கு அபவாதமாகி ஆத்யுதாத்தமாயிற்று. உஹா வாமிந்த்ராக்நீ ஆஹுவத்யை* ப்ரேந்த்ராக்நீ விச்வா புவநாத்யந்யா* இத்யாதி ஸ்தலங்களில் முன் சொன்ன அபவாதமின்திக்கே வாக்யமத்யே இருப்பதால் ஸம்புத்திக்கு இயற்கையான ஸர்வாநுதாத்தம். *இந்த்ராக்நீ மே வர்ச்ச: க்ருணுத்தாம் வர்ச்சஸ் ஸோமோ ப்ருஹஸ்பதி:* இத்யாதி ஸ்தலங்களில் ப்ரதமாவிபக்தியாகையாலே அந்தோதாத்தம்.

நாலெழுத்துப் பதம்=[வாஜயந்த:] இதில் ஸ்வரபேதம்பட்டுமன்று; அவக்ரஹபேதமுமுண்டு. (அவக்ரஹமாவது வேஷ்டனம்.) இதில் மூன்றுமெழுத்தான யகாரம் உதாத்தமாகச் சிலவிடம்; ஸ்வரிதமாகச் சிலவிடம்; உதாத்தமாயிருந்தால் அவக்ரஹமுண்டு; ஸ்வரிதமாயிருந்தால் அது கிடையாது. *ஸஹஸ்தமா ஸஹஸா வாஜயந்தா* என்றவிடமும் நினைப்பது. இங்கு ஸ்வரபேத நிமித்தமென்னவென்றால், இங்கு விபுலமான விசாரம் செய்யவேண்டியிருக்கிறது. வேதபாஷ்ய விமர்சனத்தில் அது செய்திருக்கிறோம். (1–3.) *அச்யாம வாஜமபி வாஜயந்த:* என்கிறவிடத்தையும், (1–4.) *த்வயா வாஜம் வாஜயந்தோ ஜயேம* என்றவிடத்தையும் நோக்கினால் ஸ்வரபேதம் புலனாகும்.

### ஐயெழுத்துப்பதம் த்யாவாப்ருதிவீ

இப்பதத்திற்கு இந்த்ராக்நீ பதத்திற்போல மூன்று விதமான ஸ்வரம் காண்கிறோம். முதலெழுத்தும் கடைசியெழுத்தும் உதாத்தமாக வருவதொன்று. *ஸமுத்ர உதரமந்தரிக்ஷம் பாயுர் த்யாவாப்ருதிவீ* "யஜ்ஞோ யஜமாந த்யாவாப்ருதிவீ ஸ்தாமித்யாஹ" என்னுமிடம் காண்க. *ஏதது த்யாவாப்ருதிவீ பத்ரமபூத்* *வுரதெநஃஹாவாவுரயிவீ* இத்யாதி ஸ்தலங்களில் ஸர்வாநுதாத்தம். கடைசியெழுத்துமட்டும் உதாத்தமாகவருவது ப்ரஸித்தமே. இந்த பேதங்களுக்கு நிமித்தம் இந்த்ராக்நீ பதத்திற்குத் தெரிவித்ததுபோலவே.

இனி ஆறெழுத்துப் பதம் கேண்மின். *ஊஜ ாவெுரஹஜொதீ* (இந்த்ராப்ருஹஸ்பதீ) என்கிற பதத்திற்கு இரண்டு வகையான ஸ்வரம் (3-3.) முடிவான அநுவாகத்தில் ஸர்வாநுதாத்தம்; ஸம்புத்தியாதலாலும் பாதாதித்வாதி அபலாதமில்லாமையாலும். (5-7.) *ஊஜ ாவெுரஹஜொதீ ஊஶ–ஹூாழ* என்றவிடத்தில் ஸம்புத்தியல்லாமையாலே உள்ளபடியிருக்கவேண்டிய ஸ்வரமுள்ளது என்றுணர்க.

(தொடரும்)

---

# திருவல்லிக்கேணி - வேதவேதாந்தவர்த்திநீ.

இந்த ஸபையின் வார்ஷிகோத்ஸவ நிகழ்ச்சியைப்பற்றிச் சென்ற விதழில் வெளியிட்டிருந்தோம் ஆனால் அந்த ஸந்தர்ப்பத்தில் ஸ்ரீமதுபயவே, காரப்பங்காடு ஸ்வாமி திருநாடலங்கரித்தபடியால் அப்போது அந்த நிகழ்ச்சி தடைபட்டுவிட்டது அது 10-9-71 முதலாக 19-9-71 வரைக்கும் முன்குறித்த படியே நடைபெற்று முடிந்தது.